# சிவபெருமான் திருநடனம்

# COSMIC DANCE OF SHIVA





BY

S. PANDIT NADARAJA

(Retired Teacher & Religious Lecturer)

உ. சிவமயம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவபெருமான் திருநடனம்

# COSMIC DANCE OF SHIVA

BY

PANDIT S. NADARAJA

(Retired Teacher & Religious Lecturer)



இஃது

யாழ்ப்பாணத்து நீர்வேலிச்

சங்கர சிவப்பிரகாச பண்டிதரவர்களின்

புதல்வன்

பண்டித நடராஜபிள்ளையால்

இயற்றப்பெற்று

கொழும்பு

மெய்கண்டான் அச்சியந்திரசாலையில்

அச்சிடுவிக்கப்பெற்றது.

உ

திருச்சிற்றம்பலம்

# உபக்கிரமணிகை

# PREFACE

அகண்டாகார நித்த வியாபக சச்சிதானந்தச் சுவரூபி யாகிய சிவபிரானுனவர், ஆன்மாக்களின் பொருட்டுச் செய்யும் படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளலென்னும் ஐந்தொழிற்களின் காரணுர்த்துமாகச் செய்த செய்கின்ற திருநடனங்களையும், அவற்றினுண்மைக் கருத்துக்களையும் நம் சிற்றறிவிற்கெட்டியவாறு பல நூல்களிலுமிருந் தெடுத்துக் காட்டி,

"முன்னேர்மொழி பொருளேயன்றி யவர்மொழியும்
பொன்னே போற்போற்றுவ மென்பதற்கும்,"

என்றபடி யவ்வந்நூல்களின் மேற்கோள்களையுமவ்வவைகளின் சான்ருகவெடுத்துக் கூட்டிச் சைவசித்தாந்தப் பொருட்களையுமிடையிடையே பெய்து, சிவபெருமான் திருநடனம் என்னும் மகுட நாமஞ் சூட்டிச் சைவசித்தாந்தச் சார்பு நூலாக இந்நூலை வெளியிடுகின்றனன். இந்நூலின் கண்ணே சிவபிராஞரின் திருநடன சரித்திரங்களே யன்றிச் சரியை, கிரியை, யோகம், ஞானமென்பனவும் அவ்வந் நெறிகளில் நிற்போர் குணங் குறி செயல்களும், அவற்றின் பலா பலன்களும், சிவஸ்தலங்களின் மகிமையும், ஈகையினத்தியாவசியகமும், ஈயாதாரிழிவும், ஞானிகளின் உயர்வும், ஞான குருவை யடையும் முறைமையும், முத்தியினிலக்ஷணமுமாதிய வற்றைப் பற்றிச் சுருக்கியும் விரித்துங் கூறப்பட்டிருக்கின்றன. இவைகளைப் பற்றிக் கூறும் முதனூல்கள் பெரும்பாலும் வடமொழியிலும், தமிழ்மொழியிற் பத்தியரூபத்தினுமிருப்பதனுலும், தமிழ்மொழியிற் கத்தியரூபத்திற் சிற்சில விருப்பி

னும், அவை மிகவுங் கடூரமான பதங்களைக் கொண்டாக்கப் பட்டிருப்பதனாலும், அவை வியுற்பத்திமான்களுக்கன்றி யேனையோர்க்கிலகுவிலுணர்ந்துகொள்ள முடியாதிப்பதனா லும், அவ்வாறாய பூரண வியுற்பத்திமான்களும் பிணி வறுமை யாதியனவாய காரணார்த்தமாக விவேகங் கிளராத காலத் துணர்ந்துகொள்ள வியலாதிருப்பதனாலும், பல பெரியோர் களின் வேண்டுகோளின்படியே யாவருமிலகுவிலுணரும் வண்ணமிந்நூலை இயன்றளவில் மிக விலகுவான இனிய சொற்களைக் கொண்டாக்கி வெளியிடுகின்றனன். பெரும் பாலுந் தொடர் மொழிகளையெல்லாம் பிரித்தும், கடூரமாக விருக்குஞ் செய்யுட்களுக்குக் கருத்துரை சேர்த்துமிருக்கின் றேன்.

''அல்லை யிதல்லை யிதென மறைகளு மன்மைச்
சொல்லினாற் துதித்திளைக்குமிச் சுந்தரனுடற்க்
கெல்லையாகுமோ''

எனப் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணத்திற் கூறியாங்கே வேதங்களினாலும், விஷ்ணு பிரமா முதலிய தேவர்களினாலும் முனிவர்களினாலும் இன்னுமித்தன்மைத் தெனவறிந்துரைத்தற்கரிய சிவபரம் பொருளின் திருநடனச் செயல்களை ஒன்றிற்கும் பற்றாத சிறியேன் எடுத்துக்காட்டி விளக்குவான்றுணிந்தமை ''இறைநில மெழுது முனிளைய பால கன் முறைவரைவேனென மொழிவதொக் குமால்'' எனக் கந்த புராணத்திற் கூறியவாறே யோர் பேர் வியப்பேயெனினும் வேட்கை மீக்கூர்ந்தே வெளியிட்டனனாதலினிஃது மெம்முள் ளந்தர்யாமியாகி நிற்கும் சர்வ வியாபகராகிய சிவபரம் பொருளின் திருவிளையாடல்களுளொன்றேயாகுமெனவு முய்த்துணர்க,

அரியநற் பரதவிதிமுறை வழுவாதாடுநர்
ஆடல்கண்டுவப்போர்
விரிசினைத் தருவின் வாழ்கவி நடமுங் கண்டுள
விருப்பொடு வியப்பர்.

எனச் சிவராத்திரி புராணத்திற் கூறியபடியே உண்மை ஞானிகள் இச்சிறு நூலினைக் கண்டு இஃது சிவ கதை யாமெனத் தெளிந்து மகிழ்தாசி கூறுவர் நூல்களையியற்றுதல் அருஞ் செயலென அக்கினி புராணத்திலும் யாப்பருங்கலக் காரிகையுரையினுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

அரிதே மனுடப்பிறப்பினராய் வரலங்கதினும்
அரிதேபலகலை கற்றவ ராதலதனினுமற்
றரிதே கவிக ளமைப்பவராத லதனினுமற்
றரிதே பலநூல் செயவல்ல ராதலவனியிலே,

இவ்வாற்றானே நூலியற்றுபவர்கள் இலக்கணப் பிழையின்றி முதநூல்களின் கருத்துடனும், ஆன்றோர் பலரின் கருத்துடனும் ஒப்ப முடித்தே நூலியற்றல் வேண்டும். நூலின் கட்பிழைகள் விரவியிருக்குமேற் கற்போர் பலருங் கெடுதல் கூடும். பண்டைக்காலத்திலோ வெனின் மன்னர்களும் மன்னர்களைச் சார்ந்து புலவர்களுந் தமிழை வளர்த்தார்கள். கோடபெருஞ் சோழன் சேரமான் கணைக்கலிரும்பொறை, சோழன் நலங்கிள்ளி, பாண்டியன் அறிவுடை நப்பி, ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் அவன் மனையாள் பெருங்கோப் பெண்டு என்னும் அரசர்களும் அரசியும் தமிழறிவிற் சிறந்து விளங்கினர்களென்பதற்குப் புறநானூற்றுச் செய்யுட்களே சான்றாகும். இவ்வாற்றானே புலவர்களான மன்னர்களின் சபையிற்றிகழ்ந்த புலவர்களின் கல்வித் தாரதம்மியத்தை யார்தான் அளவிட வல்லுனர்.

இஃதே யல்லாதுண்மைப் புலவர்கள் வீற்றிருத்தற் கிடங்கொடுத்தும் மற்றையோரிருத்தற் கிடங்கொடாதும் தெய்வீக முடைத்தாய சங்கப் பலகையொன்று மதுரை மாநகரிலிருந்ததென்பதும், கடைச்சங்கப் புலவர்களுளொருவராகிய சாத்தனரென்பவர் பிறர் நூல்களிற் காணும் பிழைகளொவ்வொன்றிற்குந் தன்னுடைய தலையிலொவ்வொரு குட்டுக் குட்டினரென்பதுமதனலவர் தலை புண்பட்டுச் சிதல் பாய்ந்ததென்பதுமக்காரணப் பற்றிச் சித்தலைச் சாத்தனரென வழங்கப்பெற்றனரென்பதும், ஏறக்குறைய ஐஞ்நூறு

வருடங்களின் முன்னரே கொங்குநாட்டை அரசாண்டவர பதியாட்கொண்டானின் சமஸ்தான வித்துவானுயிருந்த பாரதம் பாடிய வில்லி புத்தூராழ்வாரென்பவரவ்வரசன தனுமதிப்படி பிழைபடப் பாடும் புலவர்களின் காதுகளை வாளாயுதத்தாலறுத்து வந்தனரென்பதுமறியக் கிடத்தலா லக்காலத்துப் புலவர்களியற்றிய நூல்களின் பெருமை இத் துணைத் தெனத்தெற்றென விளங்குதல் காண்க.

தற்காலத்திலோவெனின் உண்மையின் மதிப்புக் குன் றிப் பெரும்பாலும் நாடகத் தன்மைத்தாய், விரகரிருவர் புகழ்வாரும் வேண்டும் விரல் நிறைய மோதிரமும் வேண்டும், என்பதற்கும்,

நெளியமுது தண்டு சத்ர சாமரம்
நிபிட மிடவந்து கைக்கு மோதிரம்
நெடுகி பதிகுண்ட லப்ர தாபமும்............உடையோராய்
முகமுமொரு சம்ப மிக்க நூல்களு
முதுமொழியும் வந்திருக்கு மோவெனில்
முடிவி லவையொன்று மற்று வோருரு.....நிறமாகி
முறியுமவர் தங்கள் வித்தை தானிது

என்னுந் திருப்புகழிற்கும் (பழனி) இலக்காய்ப் பொருளான் மேம்பட்டவர்கள் ஏவலாளர்களாவது உதவியாளர்களாவது வைத்துக்கொண்டிருப்பரேல் அன்னோரியற்றுஞ் சிறுச்சிறு நூல்கள் வாயிலாக அவர்கள் நூலாசிரியர்ப் பட்டமும் பெற் றுக்கொள்கின்றனர். உண்மை நூலாசிரியர் உரையாசிரியர் களாகிய சிவஞான முனிவர் நச்சினார்க்கினியர் திருவள்ளு வர், கம்பர், தொல்காப்பியர் போன்றவர்கட்கும் தற்கால டாம்பீகர்கட்கும் பெயரளவில் யாதுதான் வேற்றுமை யுண்டோ. அறிகிலேம், இற்றைக்குச் சில்லாண்டுகளின் முன் னரும் பிரகடனமாகிவரும் நூற்களை உரை பார்க்குங் கற் களாகிய புலவர்களிருந்தனர். செந்தமிழ்ப் பத்திரிகையு முதவியளித்தது.

இந்நூல் ஞான சம்பந்தப்பட்டதொன்றுதலினிதன் கண பிப்பிராய பேதங்களும், வழுக்களும் விரவியிருத்தலுங்கூடும்.

உலகத்தவர்கள் நன்னெறி பிடித்தொழுக வேண்டுமென்னும் பேரவாக் கொண்ட மெஞ்ஞானிகள் உண்மை நூல் வாயிலா னுந் தத்தம் மனுபவ வாயிலானு முணர்ந்தமையை யிச்சிறு நூலுடனொப்பிட்டு நோக்கித் திருத்தற்பாலனவற்றையும் சேர்த்தற்பாலனவற்றையும் தெரிவிப்பரேல் அடுத்தபதிப்பிற் திருத்துதற்கும் சேர்த்தற்கு மேதுவாகும். கற்போர்க்கும் பேருபகாரமாகும்.

வாரம்பட்டுளித் தியவு நல்லவாம்
திரக்காய்ந்துழி நல்லவுந் தியவாம்
ஒரும்வையத் தியற்கை யன்றோவென
வீரவேனெடுங் கண்ணி விளம்பினுன்

எனத் திருத்தக்கதேவர் சிந்தாமணியிற் கூறியவாறே வாரம் பற்றியாவது கோபம் பற்றியாவது தாரதம்மியம் பேசுதல் அறிஞர்களின் செயலன்று.

இந்நூல் பிரகடனமாதற்கு உபகாரர்களாகித் துணை புரிந்த அருட்செல்வர்களும், பொருட் செல்வர்களும் பலரு ளர். அவர்களின் நன்றி என்றும் பாராட்டற்பாலதாகும்.

அவர்களிற் பலர் தத்தம் பெயர்களை வெளியிடவேண் டாமென வேண்டிக்கொண்டமையால், வெளியிடாதுவிடுத்த னன். இரும்புபோன்ற கன்னெஞ்சமுடையவர்களையெல்லாம் ஈர்த்து ஈர்த்து என் மேலன்பு வைக்கச் செய்து, வேண்டிய வேண்டிய பொருளுதவிகளைச் செய்யச் செய்கின்ற எனதான் மார்த்த மூர்த்தியாகிய தில்லைக் கூத்தபிரானையும், கதிர் காமக் கதிர்வேற் பிரானுரையும், இந்தப் பிரபுக்களுக்குப் பூரணவாயுளையும் நோயுற்ற வாழ்வையும், இஷ்ட சித்திகளை யும் மீண்டும் அவர்கள் இத்தகைய கைங்கரியங்கட் குதவி புரி யும் மனத்தையும் கொடுத்தருளுமாறு பிரார்த்திக்கின்றேன்.

இந்நூலை மிக அழகுற அச்சிட்டுதவிய மெய்கண்டான் அச்சுயந்திரத் தொழிலாளர்கட்கும், அதன் அதிபரும் யாழ்ப்

பாணத்துச் சரசாலேயிற் பிரபல சைவ வேளாள குலத்துதித் தவரும், பிரபு சிரோன்மணியும், சிவப்பற்றுமிக்குற்றுக் கொட்டாஞ்சேனே விநாயகராலய நிர்வாகப் வகிப்பவரும், பரோபகார சிலருமாகிய என். இரத்தினசபாபதி அவர்கட்கும் யாமும், சைவ தமிழ் உலகமும் என்றும் கடப்பாடுடைய தாகும்.

இங்ஙனம்,

**சிவபண்டித நடராஜா.**

*38*, கொட்டபோம் தெரு,
சொழும்பு, *13*.



# FOREWORD

## From S. K. Rajasingam Esqr.

(Retired Educatian Officer),

I read through a good part of the manuscripts in Tamil of the book entitled "The Cosmic Dance of Siva" by Pandit Nadaraja pillai. It deals with the fundamental and most interesting aspects of Saivaism. The dance is the pivot of Hindu Philosophy and many foreign thinkers who did not profess our religion, have often admired the art and the religious significance of this Supreme Concept in our religion·

I am much impressed with the description of the various dances and their interpretations. The brief outline of the Sidhanta Philosophy gives a full and intelligent survey of the passage of the Soul through births to the final union with Siva.

I congratulate the author and commend the book to all interested in the study of our great religion.

**S. K. Rajasingam, B. A.**

Colombo.

## (2)

## From Spencer Rajaratnam Esqr,

Retired District Judge.

Pandit S. Nadaraja Pillai is doing a great service to the Saiva religion by publishing his book on "The Cosmic Dance of Lord Shiva".

It is written in elegant Tamil and explains in simple language many matters on which students of Hindu Religion need enlightenment.

As his explainations are based on extracts from various religious works, the book is realy useful to every lover of Hindu Philosophy.

Spencer Rajaratnam,

Colombo, 5-6-62.

## (3)

Though I have not been able to read through the whole of the manuscript - it w s left with me only for a short while, - I have read several of the relevant passages, and must congratulate the author on his inteligent treatment of an intriguing subject. The Dance of Siva is a theme of difficulty for interpretation, though it has always been and will be for all times a subject of enthralling interest, not only to those who profess the Hindu Religion but to others as well.

The author has by his facile style provided his readers with an useful and interesting publication.

I have no doubt that this book will have a large circulation.

V. Manicavasagar,
District Juge,

"MITHILA"
Richmond Hill Road,
Galle.

# DEDICATION

"The Mahavansa", the oldest chronological history of Ceylon begins with the advent of the landing of King Vijaya on the shores of Lanka.

But according to thc ancient Hindu Scripts viz: 'Haalasyamanmiya'' in Sanskrit and "Thiruvilaiyadat Puranam" in Tamil, God Siva appeared in this wotld of ours as a human being married Meenatchi Ambal, the only daughter of Malayaththuvasa Pandian, the then king of Madura and later reigned over the Tamil Kingdom for ten thousand years. Several Kings and Emperors of other countries attended this Sacred wedding. It is also stated that the Sinhalese king too was present and saw the first Cosmic Dance of Siva in the Silver Chamber *(வெள்ளியம் பலம்)* at Madura.

On another occasion it is noted that a Sinhalese king took his dumb daughter to Chidambaram Temple, where the dumb daughter was blessed with speech.

From these writings it is clear that the Sinhalese are a very old race and are closely connected with the Chidambaram Temple.

Our present Prime Minister The Hon'ble Mrs. Srimavo Bandaranaiaka comes of a very reputed Kandian family and descendants of great Kandian chiefs.

In accordance to the family traditions she is today at the helm of the country with the help of God Skanda of Kataragama and the blessings of Lord Buddha.

Her impartial Government is greatly appreciated by the general public of Ceylon and admired by foreign countries as well.

Under her Government the Ministry of culture is doing a great serviee to both Sinhalese and Tamils in advancing all facilities for the publication of lit.rature in the two languages. The Tamils should be grateful for the financial assistance given by this Government for the Hindu Religious Affairs and upliftment of their culture and also for the arrangemcnts to makc Katargama a Holy City.

In appreciation
I
dedicate
this Holy book
To the most Honourable
**Mrs. Srimavo Bandaranaike,**
Prime Minister of Ceylon.
Colombo.

3—7—1962

**S. Pandit Nadaraja.**

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# COSMIC DANCE OF SHIVA

# சிவபெருமான் திருநடனம்

நடராஜர் வணக்கம்

தியாயேத் கோடி ரவிப்பிரபாம் திரிநயனம் சிதாம்சு கங்காதராம்
தக்ஸாம் கிருஸ்திதவாம குஞ்சிதபதம் சர்தூல சர்மோத்ருதம்
அக்னிம்மடோல மதாபயம் டமருகம் வாமேஸ்திதாம் சியாமளாம்
கல்காராம் ஜபஸ் தக் சுகாம் கடிகராம் தேயீம் சபேசிம் சதா,

சதஞ்சுத முதஞ்சித நிகுஞ்சித பதம்
ஜலக் ஜலக் சலித மஞ்சு கண்டகம்
பதஞ்சலி திருகஞ்ஜன மனஞ்ஜன மசஞ்சல
பதம்ஜனன பஞ்சனகரம்
கதம்பருசிமம் பாவனம் பரம மம்புத
கதம்பக விடம்பு ககளம்
சிதம்புதி மணிம்புத கிருதம் புஜரவிம்பர
சிதம்பர கடம் கிருதி பஜ.

மங்கலம் பொலிக ஐங்கரன் மலரடி
சங்கை சேருமையொடே சங்கரன் மலரடி
அறுமுகப் பெருமாள் நறுமலரிணையடி
மறுவிலாக் குரவரின் மருமலரடியிணை
சென்னியிற் சேர்ப்பன் சிறியென்
மன்னி இன்நடன நூல் நன்னய முறற்கே.

இப்பூவுலகத்திலேயுள்ள மானுடர்களிற் சிலர் சிற்சில காலங்களிற் பலபல விதமான கூத்துக்களாடுகின்முர்கள்.

தேவர்களுள்ளுஞ் சிலர் சிலசில காலங்களில் வெவ்வேறு காரணங்களைக் கொண்டு நடித்திருக்கின்றனர்கள். கண்ண மூர்த்தியானவர் தனது உயிரை அழித்தற்காகக் கஞ்சன் அனுப்பிய யானையினுடைய கொம்பை முரித்த பொழுது ஆடிய கூத்து அல்லியம் எனவும், காம குமாரனை வாணசுரன் வைத்த மறியலில் நின்றும் மீட்க நினைந்து அவ்விடம் போய்க் குடத்தின் மேல் நின்று ஆடிய கூத்துக் குடம் எனவும், வாண சுரனிடம் மல்லன வடிவத்தோடு போய்ச் சண்டையிட்டு அவன் உடலை நெரித்தபொழுது ஆடிய கூத்து மல் எனவும் பெயர் பெற்றன. காமன் தனது மகன் அநிருத்தனை வாண சுரன் சோணிதபுரத்தில் மறியலில் வைத்திருப்பதை அறிந்து அவனை மீட்டற்காக அங்கே போய்ப் பெண் வடிவங்கொண்டு ஆடிய கூத்துப் பேடு எனப்படும். இந்திராணியானவள் வாணன் நகரத்தில் வடக்குத் திக்கு வாசலில் நின்று ஆடிய கூத்துக் கடையம் எனப்படும். இலக்ஷுமி தேவியானவள் அசுரர்கள் யுத்தஞ் செய்யும் எண்ணங்களெல்லாவற்றையும் விட்டுவிட்டுத் தன்மேலாசைப்படும்படி மோகினிவடிவங் கொண்டு ஆடிய கூத்துப் பாவை எனப்படும். துர்க்கா தேவி யானவள் தன்னுடனே சண்டை செய்த அசுரர்கள் வஞ்சகமாகப் பாம்பு, தேள் முதலிய வடிவங்களைக் கொண்டுவர அவை களை அழித்தற்காக மரக்கால் கொண்டு ஆடிய கூத்து மரக் கால் எனப்படும் இனிக்கலியுகவரதராகும் நம் கதிர்வேற் பெருமானுர் போர் முனையிலே அசுரர்கள் புறங்காட்டி ஓடும் படி தமது திருக்குடையைச் சாய்த்து ஆடிய நடனம் குடை எனவும் சூரபன்பன் வேறுவடிவங்கொண்டு சமுத்திரத்தில் மறைந்திருந்தபொழுது கடலின் அலையின் மேல் நின்று துடி வாத்தியம் அடித்து ஆடிய நடனம் துடி எனவும் பெயர்பெற் றன.

இவர்களாடிய நடனங்களிவ்வாறிருக்கப்பரம பதியாகிய சிவபெருமானுடிய திருநடனங்கள் பலவாகும். இக்காரணம் பற்றியே நடராஜரென்றுந் திருநாமமவர்க்குளதாயிற்று. இந்நடனங்களுட் பிரதான மானவை சிலவற்றை இங்குக் குறிப்பிடுகின்றேன் அவை (1) வெள்ளியம்பலத் திருக்கூத்துங்

கான்மாறியாடிய நடனமும் (2) பாண்டரங்க நடனம் (3) கொடுகொட்டி, (4)சந்தியா நிருத்தம் (5) சண்டதாண்டவம் (6) திருக்குற்றால நடனம், (7) கௌரி தாண்டவம் (8) வீராட்டகாசம்( 9) அனவரதானந்தத்தாண்டவம் (10) பிரதமாமகா சங்கார நிருத்தம் என்பவைகளாகும்.

இஃதேயல்லாது தற்காலத்திலும் சிதம்பரத்தில் சிவகாம சுந்தரீசமேத ஸ்ரீ நடராஜப் பெருமானுர்க்கு மாசிச் சதுர்த்தசி சித்திரைத் திருவோணம் ஆனி உத்தரம் ஆவணிச் சதுர்த்தசி புரட்டாதிச் சதுர்த்தசி என்றும்ஆறுஅபிஷேகங்கள்ஒவ்வொரு வருடங்களிலும் நடாத்தப்படுகின்றன மானுடர்களாகிய எங்களினுடைய ஒருவருஷ காலம் தேவர்களின் ஒரு நாளாகவும் அதிலும் தைப்பொங்கலிலிருந்து ஆரம்பித்து நிகழ்வதாகிய உத்தராயனம் தேவர்களின் பகற்காலமாகவும் ஆடி மாதம் முதற்தொடங்கி நிகழ்வதாகிய தக்ஷுணாயனம் தேவர்களினிராக் காலமாகவுங் கூறப்பட்டிருப்பதால் இந்த இரண்டு அயனங்களினாரம்பங்கட்டு சற்று முன்பதாகவே நடாத்தப்படுவதாகிய மார்கழித் திருவாதிரை ஆனிஉத்தரமாகிய இருதினங்களின் விசேஷ அபிஷேக ஆராதனைகள் தேவர்களின் பிராதக்கால சாயுங்கால விசேஷ பூசைகளாகும் எனவும் மற்றைய நான்குமாதங்களில் அபிஷேகங்கள் பிராதச் சங்கமகால பூசை மத்தியான பூசை சாயுங்கால இரண்டாங்கால பூசை, அர்த்தசாம பூசைகளாகுமெனவும் தெற்றெனத் தெளிக,

மார்கழித் திருவாதிரை, ஆனி உத்தரம் என்னும் இந்த இரண்டு தினங்களிலும் இந்தச் சிதம்பரத்தில் தேவர்களெல்லோரும் வேறு வேறு உருவங்களுடன் வந்து நின்று தரிசனஞ் செய்வார்கள். ஆதலினுல் இத்தினங்களில் ஆங்குச் சென்று தரிசிப்பவர்கள் அந்தத் தேவர்களின் திருநோக்குத தீக்ஷைக்கும் ஆளாகி இஷ்ட சித்திகளை யெல்லாம் தவருது பெற்று உய்வார்கள். இதனை நேரிற் கண்ட சேந்தனாரவர்கள் தமது திருப்பல்லாண்டில்,

ஆரார்வந்தார் அமரர் குழாத்தில் அணியுடை ஆதிரைநாள்
நாராயணனொடு நான்முகனங்கி இரவியும் இந்திரனும்
தேரார் வீதியிற் தேவகணங்கள் திசையனைத்தும் நிறைந்து
பாரார் தொல்புகழ் பாடியும் பல்லாண்டு கூறுதுமே

எனக் கூறியுள்ளனர்.

## 1 வெள்ளியம்பலத் திருக்கூத்தும் கான்மாறியாடு நடனமும்

மதுரைமாநகரின் கண்ணே, தடாதகைப்பிராட்டியாரின் திருமணம் நிகழ்ந்த காலத்துத் திருநந்திதேவரினாணைப்படி, கீழண்டகடாகத்திற் கோடியோசனையுள்ள கனகமயமான ஆலயத்தில் ஆயிரம் யோசனை உயரமும் இரண்டாயிரம் யோசனை அகலமுமுள்ள சிங்காசனத்தில், தமது திருமேனியில் அக்கினிச்சுவாலை பத்துக் கோடி யோசனையும், அச்சுவாலையின் புகை ஐந்து கோடி யோசனையுமுடையவராய் வீற்றிருக்குங் காலாக்கினி உருத்திரரும், அவரைச் சூழ்ந்து அவர் போலிருக்கும் பத்துருத்திரர்களும், இந்தப் பத்து ருத்திரர்களுள் ஒவ்வொருவரையுந் தனித்தனியே பரிவாரமாகச் சூழ்ந்து, சேவித்து நிற்கும் ஒவ்வொரு கோடி உருத்திரர்களும், பைசாசம்,ர ராட்சசம், யாக்ஷம், காந்தர்வம், மாகேந்திரம், சௌமியம், பிராசேஸ்வரம், பிராமம் என்னுமெண் வகைப்பட்ட சூக்குமபுவனங்களினதிபதிகளாகிய அனந்தர், சூக்ஷ்மர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர். திரிமூர்த்தி, சிறிகண்டர், சிகண்டி என்னும் அட்டவித்தியேஸ்வரர்களும், பாவங்களைச் செய்தோர் வசித்தற்கு இருபத்தெட்டுத் தளங்களாகக் கட்டிய நிலைமாடங்கள்போன்ற ஒன்றின்மேலொன்றுய நரகங்களுக்கு அதிபதியும், கறுத்த முகமும். மழுவேந்தியகரமுமுடையருமாய கூஷ்மாண்ட தேவநாயகனும், அவரைச் சூழ்ந்து அவரைப்போலுருவாய்ந்தவர்களாய் அந்த நரகங்களைக் காக்குமநேக ருத்திரர்களும், மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை ஆகிய ஆறத்துவாக்களிலும் முறையாயமர்ந்துள்ள சதருத்திரர்களும் (சத என்பது நூறு) பிரமாண்டதர உருத்திரர்களுக்கு

உள்ளிட்ட நூறு கோடி யுருத்திரர்களும், பவன், சருவன், ஈசானன், பசு, பதி, வீமன் மாதேவன், உருத்திரன் என்னு மட்டமூர்த்திகளும், பாதாளத்திற்குமேலுள்ள ஆடகேஸ்வர புவனுதிபதியாகிய ஆடகேஸ்வரரும், பிரமனுக்கு மயங்கிய சிருட்டித் தொழிலைத் தேற்றுவிக்கும்பொருட்டாக ஒவ் வொரு கற்பத்திலுமவன் நெற்றியிலிருந்து ஒவ்வொருவரா கத் தோற்றிய மாதேவன், அரன், உருத்திரன் சங்கரன் நீல லோகிதன் ஈசானன் விசையன் வீமதேவன் பவோற்பவன் கபாலி சௌமியன் என்னும் ஏகாதச ருத்திரர்களும், கங்கா ளரும், கரிய சட்டைகளையுடையவர்களாய் நிர்வாணக் கோலங்கொண்டு நாயின் மேலிவர்ந்திருப்பவர்களாகிய அசி தாந்தகர், குரு, சண்டர், குரோதனர், உன்மத்தர், கபாலி, பீஷணர், சங்கரரென்னும் எட்டு க்ஷேத்திர பாலகர்களும், இந்திரன் அக்கினி இயமன் நிருதி வருணன் வாயு குபேரன் ஈசானியனென்னும் அட்ட திக்குப் பாலகர்களும், விஷ்ணு வும், பிரமாவும், துருவன் தமன் சோமன் அனிவன் அன லன் பிரத்தியூடன் பிரபாசன் என்னும் வசுக்களெண்மரும் மருத்துவர்களும், சூரியசந்திரர்களும் வியாக்கிரபாதர், பதஞ்சலி, உபமன்யு, அகத்தியர், சனகர் சனுதனர் சனந்த னர், சனற்குமாரர், வியாதன் வாமதேவன் சுகன் நாரதர் முதலிய முனிவர்களும், சித்தர்களும், இயக்கர்களும், கின்ன ரர்களும், நாகர்களும், பூதவேதாளங்களும், சுடளிகளும், மானுடர்களும் எங்கள் ஈழ மண்டலத்துச் சிங்கள அரசனும் வந்து தரிசனஞ் செய்தனர். திருமணம் முடிந்த பின்னர் அங்கு வந்திருந்தோர் யாவரையும் போசனமருந்துமாறு சோமசுந்தரக் கடவுளாகிய அரசர் கட்டளை செய்தனர் உடனே யாவரும் பொற்ருமரை வாவியிலே ஸ்நானஞ் செய்து நியமநிட்டைகளைச் செய்தனர். அச்சமயத்தில் வியாக்கிரபாத முனிவரும் பதஞ்சலி முனிவருங் கடவுளை வணங்கிச் சிதம்பரத்தில் கனகசபையில் நினது நடனத்தைத் தரிசித்த பின்னரே போசனஞ் செய்வதே எங்கள் நியம மாகுமெனப் பணிந்து கூறினர். வேண்டுவார் வேண்டுவதே யீபவராகிய பெருமானுரும் உளமிக மகிழ்ந்து அந்தத் திருநடனத்தை இங்கு யாம் காட்டுகின்ருேமெனத் திருவாய் மலர்ந்தருளினர்.

பொன்னவிர் கமலம்பூத்த புனிதநீராடித்தத்த
நன்னெறி நியமமுற்றி நண்ணினுர் புலிக்காலோனும்
பன்னக முனியுந்தாழ்ந்து பரவியம் பலத்துளாடு
நின்னரு ணடங்கண்டுண்ப தடியேங்க ணியமமென்ருர்
என்னலு மந்தக்கூத்தை யிங்குநாஞ் செய்துந் தில்லைப்
பொன்னகருலகமெல்லா முருவமாம்புருடற் குள்ள
மின்னதாந்துவாதசாந்த மென்றிறை யருளிச்செய்ய
மன்னவவேனை பங்கம் யாவென மன்னன் சொல்வான்

என்னுந் திருவிளையாடற் புராணச் செய்யுட்களாலித னுண்மை தெளிக.

அச்சமயத்திலாலயத்தின் கீழ்ப்பாகத்திலோர் வெள்ளிச் சபை உண்டாயது. ஆணவமலத்தினுற் கட்டுண்டவர்களின் மனத்திற்கும் வாக்கிற்குமெட்டாதவராகிய அப்பெருமானுர் கோடி சூரியப் பிரபையுடையவராய், பெரியவுடலின்மேல் தலைபெற்றுள்ள ஐந்து முகமுடைய முழவத்தை நந்தி தேவ ரடிக்கவும், மொந்தையையும், இருதலையுஞ் சுருங்கிய நெடிய வுடலினையுடைய தண்ணுமையையும் கணங்கள் முழக்கவும், விஷ்ணுதேவர் இடக்கை என்னும் வாச்சியத்தை முழக்கவும், தோற்கருவி, துளைக்கருவி, கஞ்சக்கருவி, நரம்புக்கருவி மிடற்றுக்கருவிகளாகிய பஞ்சதுந்துபிகள் முழங்கவும், சரஸ் வதி சுருதி கூட்டவும் பிரமதேவர் சாமகீத யாழ் வாசிக்கவும் தேவர்கள் பூமாரி பொழியவும், முயலகன்மீது வலத்திருத் தாளை யூன்றிச் சிலம்புகளொலிக்கத் திருநடனமாடியருளி னர். முனிவர்களிருவருமானந்தக் கடலிலாழ்ந்தனர். திரு மணந் தரிசிக்க வந்த ஏனைய யாவருமங்ஙனே ஆனந்தங் கொண்டனர். யாவரும் பன்முறை விழ்ந்து வணங்கினுர்கள்.

ஆடுனுனமல மூர்த்தி பஞ்சலி முகிழ்த்துச் சென்னி
சூடினுரடியில் விழ்ந்தார் சுருதியாயிரநாவாரப்
பாடினுர் பரமானந்தப் பரவையிற்படிந்தாரன்பு
நீடினுர் நிருத்தானந்தங் காண்பதுநியமம் பூண்டார்

முனிவர் கந்திருவர் வானோர் தானவர் மோனயோகர்
புனிதகிம் புருடராதிப் புலவருமிறைஞ்சி யன்பின்
கனிதருமின்பத் தாழ்ந்தார் திருமணங்காணவந்த
மனிதருங் காணப்பெற்றார் மாதவர்பொருட்டான்மன்னே

இவ்வாறாகிய சமயத்திலே பதஞ்சலி முனிவரும் வியாக்கிரபாத முனிவரும் சோமசுந்தரப்பெருமானாரைப்பன் முறையும் வணங்கி, இறைவனே, இத்திவ்வியத் திருநடனத்தை இந்தவெள்ளியம் பலத்திலே எந்நாளுஞ் செய்துகொண்டு ஆன்மாக்களைப்பந்தித்திருக்கும் பாசங்களை நீக்கியருளல் வேண்டுமென்றும், இத்திருநடனத்தைத் தரிசித்தோர் யாவரும் மீண்டும் மீண்டும் வந்து பூமியிற் பிறந்திறந்துழலாது முத்தியின்பத்தையடைதல் வேண்டுமென்றும் பணிந்துகேட்டுக்கொண்டார்கள். இறைவனுமதற் கொருப்பட்டு அங்ஙனே நின்று ஆடல்செய்கின்றனர்.

எந்தையித் திருக்கூத்தென்று மிந்நிலை நின்றியார்க்கு
பந்தவெம்பாச நீங்கப் பரித்தருள் செய்தியென்னச்
செந்தமிழ்க்கன்னிநாடு செய்தமா தவப்பேறெய்தத்
தந்தனமென்றான் வேதந் தலைதடு மாறநின்றான்.

அராமுனியீதுவேண்டு மாதியெம்பெருமவிந்த
நிராமயபரமானந்த நிருத்தநேர் கண்டோரெல்லாந்
தராதலமிசை வந்தெய்தாத் தனிக்கதி பெறுதல் வேண்டும்
பராபரவென்று தாழ்ந்தான் பகலனுமதற்கு நேர்ந்தான்.

என்னுந் திருவிளையாடற் புராணச் செய்யுட்களாலிதனுண்மை தெளிக.

இங்ஙனமாகவே பல்லாண்டுகள் செல்ல இந்த மதுரைமாநகருக்கு விக்கிரமபாண்டியன் மகனாகிய இராசசேகரபாண்டியன் அரசனானான், இவன் அறுபத்துமூன்று கலைகளிலும் வல்லவன், அக்காலத்தில் ஓர் தினம் இவ்வரசனிடத்திலோர் புலவர் வந்து, அரசனை விளித்து, உமதயல் நாடாகிய சோழதேசத்தை உறையூரிலிருந் தரசாட்சி செய்கின்ற கரிகாற்

சோழ ராஜன் அறுபத்துநான்கு கலைகளிலும் வல்லவனாக விருக்கின்றான், நீர் பரத நூல் கற்கவில்லையே யெனப் பரிகாசஞ் செய்தனர், அது கேட்ட பாண்டிய ராசன் வெட்கமுந் துக்கமுமுடையவனாய் நடனக் கலையிற் சிறந்த புலவர்களை யழைத்துப் பரத நூல்களிற் கூறப்பட்ட முறைப்படி பலவகையான கூத்துக்களையும் கசடறக் கற்றான், இங்ஙனே நடிக்கும் பொழுது தனது சரீரத்திற் சாலவும் நோ வருத்தமெய்தினான். சிறிது நேரம் நடித்த தனக்கு இத்துணை வருத்தமுள்ளதேயெனில், ஓவாதேயிரவும் பகலும் நடித்துக் கொண்டிருக்கும், சிவபிரானாரின் திருப்பாதத்திற்கு எத்துணை வருத்தமிருக்குமோ வெனவும், இதனைத் தாமனுபவ வாயிலாலுணர்ந்தும் பின்னருமதனைப் பார்த்துக்கொண்டு வாளாவிருத்தல் நன்றாகுமாவெனவும், பக்குவான்மாக்கட்குப் போகத்தையும், மோட்சத்தையுங் கொடுப்பதாகியவித்திரு நடனத்தை யினி ஆடல் வேண்டாமெனத் தடுட்பதோவெனிலஃதுந் தகாத செயலாகுமெனவு மிவ்வாற்றானே பலவாற்றானெண்ணிக் கொண்டு சிவராத்திரி தினத்திற் சோம சுந்தரேஸ்வர ராலயத்தை யடைந்தான். நான்கு யாமமும் விதிப்படி பூசை செய்தான். திருநடனத்தைத் தரிசித்தான். இறைவனை நோக்கிச் சுவாமீ நீர், இடது திருக்காலை நிலத்திலூன்றி முன்னரே நிலத்தில் வைத்திருந்த வலது திருக்காலைத் தூக்கி மாறியாடி யருளல் வேண்டும். இஃதில்லையேயாயின் அடியேன் வாளின்மேற் குப்புற விழ்ந்திறந்துவிடுவேன் என்றான். அன்பால் விழைந்து வேண்டுபவர்கட்கு அருள் புரிபவராகிய பெருமானாரும் அவ்வாறே கான்மாறியாடி யருளினர். அரசன் பேரானந்த முடையவனாய் எந்நாளும் இவ்வண்ணமே யாவருங்கண்டு தரிசிக்குமாறு இங்கு நின்று நடனமியற்றல் வேண்டுமென்று பணிந்து பிரார்த்தித்துக்கொண்டனன்.

நின்ற தாளெடுத்து வீசி யெடுத்ததாணிலமீதூன்றி
யின்றுநான் காணமாறி யாடியென் வருத்தமெல்லாம்
பொன்றுமா செய்தியன்றேற் பொன்றுவவென்னா வன்பிற்
குன்றனான் சுரிகை வாண்மேற் குப்புற விழ்வேனென்னா.

நாட்டினுன் குறித்துப்பாய நண்ணுமுனிடத்தாளூன்றி
நிட்டினுன் வலத்தாள்விசி நிருமலன் மாறியாடிக்
காட்டினுன் கன்னிநாடன் கவலேயும் பாசமூன்றும்
விட்டினுன் பரமானந்த வேலேயுள் வீட்டினுனே,

என்றுமிப்படியே இந்தத்திருநடம் யாருங்காண
நின்றருள் செய்யவேண்டும் நின்மலமான வெள்ளி
மன்றவ அடியேன் வேண்டும் வரமிது என்று தாழ்ந்தாள்
அன்று தொட்டின்று மெங்கோன் அந் நடநிலேயில்
நின்றுன்

என்பது திருவிளேயாடற் புராணம்.

## 2. பாண்டரங்க நடனம்

இஃதாவது சிவபிரானுனவர் முப்புர சங்காரத்திற்குப் போன காலத்திற் தேர்ச்சாரதியாக இருந்த பிரமதேவர் சரஸ்வதி தேவியின் பிரிவைத்தாங்க முடியாமல் வருந்த அதனேத் தீர்த்தற்காக வெண்ணீறு தரித்துக்கொண்டு அநதப் பிரம தேவருக்கு முன்னரே ஆடிய திருநடனமாகும்.

## 3. கொடுகொட்டி

இஃதாவது சிவபிரானுனவர் முப்புரதகனஞ் செய்தவுடன் அவ்விடத்திலே நின்று உமாபிராட்டியார் பாணியும் தூக்கும், சீரும், இசைத்துத் தாளம் போடத் தாமும் தமது திருக் கரங்களாற் தாளம்போட்டு ஆடிய திருநடனமாகும். திருவதிகையிலேயாகும்.

## 4. சந்தியாநிருத்தம்

இஃதாவது தேவர்களும் அசுரர்களும் பாற்கடலேக் கடைந்தகாலத்தில் எழுந்த ஆலகாலத்தை உண்டருளிய சிவ பெருமானுனவர் தேவர்கள் வழிபாடுசெய்யத் தேவியார் உபசாரஞ் செய்யச் சயனத்தமர்ந்தருளியிருந்தனர். மறு நாளாகிய திரயோதசித்திதியிலே பெருமானுர் உமாபிராட்டி

யாரை நிறுத்தித்தமது திருக்கரத்திற் தமருகந் தாங்கிச் சூலா யுதத்தைச் சுழற்றி ஒரு சாமகால அளவில் திருக்கயிலாய மலையிலே செய்த திருநடனமாகும். இத்தினத்தையே பிர தோஷ தினம் என்பார்கள். இந்தப்பிரதோஷதினம் மாதந் தோறும் பௌர்ணிமையிலிருந்து பதின்மூன்றுவது நாளாகக் கணக்கிடப்படும் இத்தினத்திற் சாயுங்காலத்திற் சிவபெரு மானைத் தரிசனஞ் செய்வதேமிக விசேஷமாகும் பிரதோஷம் என்பது மாலைக்காலம் எனப்பொருளுடையது.

அடுத்ததிதியதனிற்

புங்கவர் பாரணம்புரிந்தே பூர்த்தியுற்றுர் இதன்மேற்
பொருந்துந் திதிதனி லிமவான் பொற்றெடியைவைத்தே
சங்கரன் சூலஞ்சுழற்றி நடித்தனனோர் யாமம்
சதுர்மறை நூலது பிரதோடமெனவே சாற்றும்

என்பது ஆகமத் திரட்டுக் செய்யுள். இந்தப்பிரதோஷ புண்ணிய காலமானது சூரிய அஸ்தமயனத்துக்கு முனபாக மூன்றே முக்கால் நாளிகையும் பின்பாக மூன்றே முக்கால் நாளிகையுமாகிய ஏழரைநாளிகைக் காலமாகும். அஃதாவது பிற்பகல் நாலரைமணி தொடங்கி முன்னிரவு ஏழரைமணி வரை உள்ள காலமாகும். பிரதோஷ விரத மனுட்டிப்பவர் களும் சுவாமி தரிசனஞ் செய்பவர்களும் பகற்காலத்திலே போசனஞ் செய்யாது அன்று பிற்பகல் நாலரைமணிக் குச் சற்று முன்னதாகவே ஸ்நானஞ் செய்து நியம நிட்டைகளை முடித்துக்கொண்டு சிவாலயத்தை அடைந்து பிரதோஷ காலம் முடியும்வரை சிவபெருமானையே வணங்கல் வேண்டும். சிவாலயத்தை அடைந்தவுடன் முதலாவதாக ஸ்தூலலிங்க மாகிய கோபுரத்தை நமஸ்காரஞ் செய்து கொண்டு கோபுரத் திலோர் பக்கத்திலிருக்கும் விநாயகக் கடவுளையும் வணங்கிக் கொண்டு உட்சென்று இடப தேவரைத்தரிசித்து அங்கே நின் றும் இடப்பக்கமாக உள் வீதிவழியே சென்று சண்டேஸ்வர ரைத்தரிசித்து சென்றவழியே திரும்பிவந்து மீண்டும் இடப தேவரைத்தரிசித்து அங்கு நின்று வலமாக வடக்கு வீதிவரை

போய்க் கோமுகையைக்கடவாது முன் சென்றவழியே திரும்பிவந்து இடப தேவரைத்தரிசித்து அங்குநின்றும் இடமாகச் சென்று சண்டேஸ்வரரைத்தரிசித்து அதினின்றும் திரும்பி வலமாக வந்து இடபதேவரைத்தரிசியாது வலமாகச் சென்று வடக்கு வீதியை அடைந்து திரும்பிவந்து இடபதேவரைத்தரிசியாது இடமாகச் சென்று, சண்டேஸ்வரரைத்தரிசித்துத்திரும்பிவந்து இடப தேவரைத்தரிசித்து அவருடைய இரண்டு கொம்புகளின் நடுவாக ஓம்ஹர ஓம்ஹர ஹர என்று சொல்லிச் சிவபெருமானை வணங்குதல் வேண்டும். இவ்விதமாகவே பிரதோஷ காலத்தில் சிவதரிசனஞ் செய்பவர்களை கடன், வறுமை, நோய் கிலேசம் அவமிருத்து, மரணவேதனை என்பன வந்து சேரா முன்னரே இருப்பின் அவை அவர்களை விட்டுவிட்டுப்பறந்தோடிவிடும். இந்தப்பிரதோஷ காலத்தில் போசனம் சயனம், எண்ணை தேய்த்தல் விஷ்ணுதரிசனம் முதலியன செய்தல் ஆகா எனவே சிவாலயதரிசனஞ் செய்து முடிந்தபின்னர். முன்னிரவு ஏழுமணியின் பின்னரேயே போசனஞ் செய்தல் வேண்டும்.

## 5 சண்டதாண்டவம்

இஃதாவது சிவபெருமானுனவர் திருவாலங்காட்டிலே சுகந்தர் கார்க்கோடசர் என்றும் இருஷிகள் தரிசிக்க வைரவ மூர்த்தங் கொண்டு அபிநயம் நவரசம் விளங்க துத்த முதலாய சப்த சுரங்களோடு பாட்டொலிப்ப கொக்கரை முதலாய பல வாத்தியங்கள் கோஷிக்கக் காளியுடனே நிருத்தஞ் செய்து அவள் அகங்காரத்தை அடக்கியருளிய நடனமாகும்.

இன்சுவை பொழியுஞ் சாய லபிநயமிலங்கச் செவ்வாய்
புன் சிறுமுறுவல் பூப்பப் பூரண ஆநந்தம் பூரித்
தன் புறுமவையோ ருள்ளம் அயர்தர வியங்கட்கேற்ப
இன் புறுநடனங் காளியோடரன் விளைத்த வேலை.

துத்தங் கைக்கிளை விளரிதார முளையினியோசை
பண்கெழுமப் பாடிச்
சச்சரி கொக்கரை, தக்கையோடு தருணிதந்
துந்துமி தாளம் வீணை.
மத்தளங் கரடிகை வன்கை மென்தோற் றமருகம்
குறமுழா மொந்தை வாசித்து
அத்தனை விரைவினொடாடு மெங்க ளப்பனிடந்
திருவாலங் காடே,

என்னும் திருப்பதிகத்தால் திருவாலங் காட்டில் நடனமியற்றிய தன்மை கூறப்பட்டிருக்கின்றது.

மேருமுதற் குலவகைகள் அனைத்தும் தூளாம்
விரவு பிரமாண்டமது வெடித்து வேறும்
நிருதிரை கடலனைத்தும் அரும் பாழாகும்
நிலையுணர்ந்து நடுங்கியுனைச் சரணமாக
சாருமடியேங்கள் துயர் தவிர்த்தி சார்ந்தார்
தமை அளித்தல் தலைவர் தங்கட் கருளாமென்றே
பேருலகுமடிபோமு மழியாவண்ணம்
பெயர்த்து நடமகற்றிடுதல் பெருமையாமால்.

இந்தத் திருவாலங்காட்டுத் திருத்தலத்தின் பெருமையை உணர்ந்தவராகிய எங்கள் யாழ்ப்பாணத்துச் சங்கித விற்பன்ன கதாப் பிரசங்க ரத்தின சபா சிங்கமாகவிருந்த பிரம்மஸ்ரீ சச்சிதானந்த ராஜயோகிகள் என்னும் சங்கரசுப்பையரவர்கள் ஆங்குச் சென்று தரிசனஞ் செய்து அவ்வாலயத்திற்கு யாழ்ப்பாணத்தவர்களின் பெயரினாலே ஓர் திருத்தேர் செய்வித்து எங்கள் பெருமையை நிலைநாட்டவேண்டுமென்னும் பேரவாக் கொண்டு இங்கு வந்து கொழும்பிலும் யாழ்ப்பாணத்திலும் பல பிரசங்கங்கள் செய்து அதனால் வருமூதியத்தை யெல்லாங் கொண்டு தேர் வேலையைச் செய்வித்தனர். இந்திய பிரபுக்கள் பலர் உதவ விரும்பினார்கள். ஆனால் அவர் ஒரு சதம் தானும் பிறரிடம் இதற்காக வாங்குவதில்லையென்றும் முழுவதும் யாழ்ப்பாணத்தவர்களின்

செலவிலேயே தேர் வேலே முடிக்க வேண்டுமென்னும் நிபந் தனே செய்திருந்தனர். கொழும்பிலுள்ளவர்கள் மனமுவந்து பணமுதவினர்கள் ஆனல் ரத வேலே முழுவதும் முடிய முன் னரேயே அவர் சிவகதியடைந்துவிட்டனர். எஞ்சியிருக்கும் இந்தச் சிவபணியை இதுவரை நம்மவர்கள் செய்வித்துப் பெருமானுரைத் தேருலா வரச்செய்து கண்டு மகிழாதிருப் பது நம்மவர்களின் பெருங் குறையேயென்பது யாவருமுணர வேண்டியதேயாகும்.

எங்கள் யாழ்ப்பாணத்தில் அரசினர் உத்தியோகத்திலி ருந்து இளேப்பாறியிருக்கின்ற செல்வந்தர்கள் பலருளர். இவர்கள் இதற்காக ஒரு சங்கங் கூடி, இத்திருப்பணியை மேற்கொள்வார்களேல் பெரும் புகழும் புண்ணியமும் பெரு மையுமாகும்.

## திருக்குற்ருல நடனம்

இஃதாவது சிவபெருமானுனவர் அகத்தியர் விஷ்ணு பிரமா வாசுகி யாதியோர் திருக்குற்ருலத்திற் பெருந்தவஞ் செய்து வேண்டிக்கொண்டமையால் அங்ஙனேயுள்ள சித்திர சபையிலே வாணுசுரன் தனது ஆயிரங் கைகளினுலே மிரு தங்கமடிக்கவும் பானு கம்பன் தனது இரண்டாயிரங் கை களாற் சங்குகளே எடுத்தூதவும் தும்புருவர் நாரதர் என்னு மிருவரும் ஏழிசை பாடவும் சரஸ்வதி பாக்கள் பாடவும் பார்வதியம்மையார் தாளம் போடவும் ஒரு திருக்கரத்தில் மழுவாயுதம் ஏந்திக் கொண்டும் ஒரு திருக்கரத்தில் உடுக்கு ஏந்தி முழக்கியும் மற்றை இரு திருக்கரங்களே அபயமாகவும் வரதமாகவும் வைத்துக்கொண்டும் தகும், தகும் என்னும் பேரொலி உண்டாகும்படி ஞானத் திருநடனமாடியருளினர். தேவர்கள் யாவரும் சய, சய என்று ஆரவாரஞ் செய் தார்கள்.

## ஹெளரி தாண்டவம்

இஃதாவது சிவபிரானுனவர் மோகினி ரூபங் கொண்ட மகாவிஷ்ணு மூர்த்தியுடன் தாருகா வனத்தையடைந்து

பிக்ஷாடண ரூபந் தாங்கித் திருநடனஞ் செய்தமை காரண மாக உமாபிராட்டியார் ஊடல் கொண்டனர். அதனை நீக் குதற்காகக் கயிலை மலையிலே அந்தத் தாருக நடனத்தை ஆடிக் காட்டியதேயாகும்.

## விராட்டகாசம்

இஃதாவது பிரணவப் பொருள் தெரியாது மயங்கிய பிரம தேவரை அறுமுகப் பெருமானார் குட்டிச் சிறையில் வைத்தனர். அந்தப் பிரம தேவரை மறியலிலிருந்தும் விடு தலை செய்யும்படி விஷ்ணு முதலிய தேவர்கள் சிவபெருமா னிடஞ் சென்று இரந்தார்கள். சிவபிரானார் உமா பிராட்டி யாருடன் எழுந்தருளி முனிவர்களும் எஃகு செவியினாற் சுருதியை அளந்து நரம்பு கட்டிய சுற்றுதலுடைத்தாய வார்க்கட்டினையுடைய யாழினால் இசை நூலின் முறைமை குற்றமின்றி விளங்கும்படி நரம்பை வாசித்துக்கொண்டு பதினான்கு கோவை மணிகளென்னும் பருமங்களணிந்தவர் களாய் மாந்தளிர் போன்ற சரீரங்களுடையவர்களாகிய கந்தருவ மகளிர்களும் கந்தருவர்களும் முன்னே செல்லவும், காளி, காளாத்திரி, யமன், யமதூதி என்னும் நான்கு பற் களையுடைய பாம்புகளுஞ் சாகும்படியாக அடிக்கின்ற சிறகு களையுடைய கருடனின் கொடியை உடைய விஷ்ணுமூர்த்தி யும் பல யாகங்களைச் செய்து தேவர்க்கரசனாகி ஐராவத யானையின் மேலேறிய இந்திரனும் பன்னிரண்டு சூரியர்களும் பதினொரு உருத்திரர்களும் வசுக்கள் எண்மரும் மருத்துவ ரிருவரும் தேவர், சித்தர், அசுரர், தைத்தியர், கருடர், கின் னரர், நிருதர், கிம்புருடர், இயக்கர், விஞ்சையர், பூதர், பைசாசர், உரகர், போகபூமியர் என்னும் பலவகைக் கணங் களுஞ் சூழ்ந்து வர முருகப் பெருமானாரெழுந்தருளி இருக் கும் திருவாவி நன்குடி என்னும் பழனித் திருத்தலத்திற்கு வந்தருளி அப்பிரம தேவரை மறியலில் நின்றும் விடுவித்தரு ளினர். இதனை மதுரைக் கடைச் சங்க மகாவித்துவானாக இருந்த நக்கீர தேவர் தாமியற்றியருளிய திருமுருகாற்றுப் படையில்,

சிறை தைஇய வுடுக்கையர் சிரொடு
வலம் புரிபுரையும் வானரை முடியினர்
மாசற விமைக்கு முருவினர் மானி
உரிவை தைஇய வூன்கெடு பார்பி
லென்பெ ழுந்தியங்கு மியாக்கையர் நண்பகற்
பலவுடன் கழிந்த உண்டிய ரிகலொடு
செற்ற நீங்கிய மனத்தின ரியாவதுங்
கற்ருேர றியா அறிவினர் கற்ருேர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர் காமமொடு
கடுஞ் சினங்கடிந்த காட்சிய ரிடும்பை
யாவது மறியா இயல்பினர் மேவரத்
துகளில் காட்சி முனிவர் முற்புகப்
புகை முகந்தன்ன மாசி றூவுடை
மூகைவா யவிழ்ந்த தகைசூ ழாகத்துச்
செவிநேர்பு வைத்த செய்வுறு திவவி
னல்லியாழ் நவின்ற நயனுடை நெஞ்சின்
மென்மொழி மேவல ரின்னரம் புளர
நோயின் றியன்ற யாக்கையர் மாவின்
அவிர்த ளிர்புரையு மேனிய ரவிர்தொறும்
பொன்னுரை கடுக்குந் திதலைய ரின்னகைப்
பருமந் தாங்கிய பணித்தேந் தல்குல்
மாசின் மகளிரொடு மறுவின்றி விளங்கக்
கடுவோ டொடுங்கிய தூம்புடை வாளெயிற்
றழலென வுயிர்க்கு மஞ்சுவரு கடுந்திறற்
பாம்பு படப்புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள்ளணி நீள்கொடிச் செல்வனும் வெள்ளேறு
வலவயினுயரிய பலர்புகழ் திணிதோ
ளுமை யமர்ந்து விளங்கு மிமையாமுக்கண்
மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வனு
நூற்றுப் பத்தடுக்கிய நாட்டத்து நூறுபல்
வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்
திரிரண் டேந்திய மருப்பின் எழில்நடைத்
தாழ் பெருந் தடக்கை யுயர்த்தயானை
யெருத்த மேறிய திருக்கிளர் செல்வனும்

நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய
வுலகங் காக்கும் ஒன்றுபுரி கொள்கைப்
பலர்புகழ் மூவரும் தலைவராக
ஏமுறு ஞாலந் தன்னிற் றோன்றித்
தாமரை பயந்த தாவி லூழி
நான்முக வொருவர்ச் சுட்டிக் காண்வர
பகலிற் றோன்று மிகலில் காட்சி
நல்வே றியற்கைப் பதினொரு மூவரோ
டொன்பதிற் றிரட்டி யுயர்நிலை பெறீஇயர்
மீன்பூத் தன்ன தோன்றலர் மீன்சேர்பு
வலி கிளர்த்தன்ன செலவினர் வளியிடைத்
தியெழுந் தன்ன திறலினர் திப்பட
உருமிடித் தன்ன குரலினர் விழுமிய
வுறுகுறை மருங்கிற்றம் பெறுமுறை கொண்மா
அந்தரக் கோட்பினர் வந்துடன் காணத்
தாவில் கொள்கை மடந்தையொடு சின்னுள்
ஆவினன்குடி அசைதலு முரியன்

அதா அன்று

என்னும் பழனித் தலத்திற்குரிய செய்யுளில் காட்டியிருக்கின்றனர்.

இங்ஙனமாகவே சிவபெருமானனவர் பிரம தேவரைச் சிறை விடுவித்த காலத்தில் அந்தப் பிரணவத்தின் பொருளைத் தனக்குக் கூறும்படியாக முருகப் பெருமானைரைக் கேட்டனர். அறுமுகப் பெருமானர் கும்பகோணத்திலிருந்து நான்கு மைல் தூரத்திலேயுள்ள திருவேரகம் என்னும் சுவாமி மலைத் திருத்தலத்திலிருந் துபதேசித்தனர். இக்காரணத்தினலேயே அந்தத் திருத்தலத்திலிருக்கும் முருகப் பெருமானருக்குச் சுவாமிநாதர் என்னும் திருநாமமுளதாயிற்று. இந்த உபதேசத்தைக் கேட்டதும் சிவபிரானனவர் வீர மேலீட்டால் அட்டகாசஞ் செய்து அவ்விடத்தில் நின்றுடிய திருநடனமாகும்.

காமரு குமரன்சென்னி கதுமென வுயிர்த்துச் செக்கர்
தாமரை புரையுங்கையாற் தழுவியே அயனுந்தேற்ரு
ஓமென வுரைக்குஞ் சொல்லினுறு பொருளுனக்குப்
போமோ
போமெனி லதனேயின்னே புகலென இறைவன் சொற்ருன்

என்பது கந்தபுராணச் செய்யுள்.

தனக்குத் தானே மகனுகிய தத்துவன்
தனக்குத் தானேயொரு தாவருக் குருவுமாய்
தனக்குத் தானே யருட்தத்துவங் கேட்டலுந்
தனக்குத் தானிகரினுன் தழுங்கிநின் ருடினுன்.

என்பது தணிகைப் புராணச் செய்யுள். இதில் சிவபிரான் தனக்குத் தானே மகன் எனவும், தனக்குத்தானே குரு எனவும், முருகக் கடவுளிடத்திலே யுபதேசங் கேட்டதும், ஆரவாரஞ் செய்து நடனஞ் செய்தனர் எனவுங் கூறப்பட்டிருக்கின்றதே. ஆகவே முருகக் கடவுளும் சிவபிரானுரும் ஒருவரே என்பது செவ்விதே பெறப்படுகின்றது.

நன்முக மிருமூன்றுண்டால் நமக்கவை தாமேகந்தன்
தன்முகமாகியுற்ற தாரகப் பிரமமாகி
முன்மொழிகின்ற நந்தம் மூவிரண்டெழுத்துமொன்ரு
யுன்மக னுமத்தோரா றெழுத்தென வுற்றவன்றே,

ஆதலினமது சத்தி யறுமுகனவனும் யானும்
பேதகமன்ருல் நம்போற் பிரிவிலன் யாண்டுநின்ருன்
ஏதமில் குழவிபோல் வான்யாவையு முணர்ந்தான் சிரும்
போதமு மழிவில் விடும் போற்றினர்க் கருளவல்லான்

என்பன கந்தபுராணத்துத் திருவிளையாடற் படலத்துச் செய்யுட்கள்.

## 7. அனவரதாநந்தத் தாண்டவம்

இஃதாவது எல்லா அறிவும் எல்லா வல்லமையுமுடைய பரபதியாகிய சிவபெருமானுனவர் பஞ்சாக்ஷரமே திருமேனி

யாகக் கொண்டு ஆன்மாக்களுக்குப் போகமும் முத்தியுங் கொடுக்கும் பொருட்டுத் தமருகந் தாங்கிய திருக்கையினுலே படைத்தலும், அபய கரத்தினுலே காத்தலும், அக்கினி ஏந்திய திருக்கையினுலே அழித்தலும், ஊன்றிய திருக்காலினுலே மறைத்தலும், தூக்கிய திருக்காலினுலே அருளலுமாக மூன்று திருக்கைகளினுலும், இரண்டு திருக்கால்களினுலும் பஞ்ச கிருத்திய நடனத்தை எந்நாளும் எந்நேரமும் செய்து கொண்டே இருக்கின்றனர். இந்தத் திருநடனமே உலகம் நடைபெறற்கு மூலாதாரமாகும்.

இந்தத் திருநடனத்தைப் பெருமானுர் விசேஷமாகச் சிதம்பரத்திலே கோடி சூரியப் பிரபையுடையவராய்ப் பதஞ்சலி வியாக்கிரபாத முனிவர்கள் தரிசிக்கக் கனக சபையிலே விருது பாடுவோர் தாழம் முழக்கவும் வாணன் தனதிரண்டாயிரங் கைகளினுற் குடமுழாவடிக்கவும், பிரம தேவர் தாழம் போடவும், மஹா விஷ்ணுமூர்த்தி மத்தளமடிக்கவும் திருக்கையிலே பொருந்திய தமருக மொலிக்கவும், பாம்புகளிரைக்கவும், மான் கதறவும், கொன்றை மாலையிலேயுள்ள வண்டுக் கூட்டங்கள் இசை பாடவும், பால சந்திரனசையவும், கங்கா நதி சத்தமிடவும், வேதச் சிலம்புகளொலிக்கவும் முயலகன் நெழியவும், சிவகாமியம்மையார் மனம் மிக மகிழ்ச்சியடைய ஆநந்தத் திருநடனமாடியருளுகின்றனர். இந்தத் திவ்வியத் திருநடனத்தைத் தரிசிப்பவர்கள் பிறவிப் பிணியில் நின்றும் நீங்குவர். தரிசியாதவரைப் பிறவிப் பிணி விட்டு விலகா. இதனைக் கொற்றவன்குடி உமாபதி சிவாசாரிய சுவாமிகள் அருளிச் செய்த சிவப்பிரகாச நூலின் ''ஓங்கொளியாய் அருள்ஞான மூர்த்தியாகி'' என்னுஞ் செய்யுளில் ''நீங்கலரும் பவத் தொடர்ச்சி நீங்க மன்றுள் நின்றிமையோர் துதிசெய்ய நிருத்தஞ் செய்யுமென''க் கூறியுள்ளனர்.

நன்னெறி விஞ்ஞானகலர் நாடுமலமொன்றினையு
மன்னிலேயே புண்ணினின் றறுத்தருளி—பின்னன்பு
மேவாவிளங்கும் பிரளயாக லருக்குத்
தேவாய்மல கன்மந் தீர்த்தருளிப்—பூவலயம்

தன்னின்று நீங்காச் சகலர்க் கவர்போல
முன்னின்று மும்மலந் தீர்த்தாட் கொள்கை—அன்ன
வனுக்கு
ஆதிகுணமாதலினு லாடுந் திருத் தொழிலும்
என்பது போற்றிப் பஃறொடை வெண்பாப் பகுதி.

இதன் பொருள் விஞ்ஞான கலருக்கு ஆணவத்தையும் பிரளயாகலருக்கு ஆணவம் கன்மங்களையும், சகலர்க்கு ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களையும் நீக்கியாட் கொள்ளுந் தன்மையே அந்தப் பரமபதியின் குணமும் திரு நடனத் தொழிலுமாகும் என்பதாகும்.

விஞ்ஞானகலராவார் விஞ்ஞான முள்ளமையாற் கலாதிகளில்லாதவர். சுத்த வித்தைக்குக் கீழ்வாழ்பவர்கள் இவர்கள் ஆணவத்தால் மாத்திரம் பீடிக்கப்படுவர் இவர்களுக்கு மாயை கன்மங்கள் உளவாயினும் அவைகளால் வருந்தமாட்டார்கள். பிரளயாகலர் மாயை யுள்ளவர்களாயினும் அவற்ருல் வருந்தாது ஆணவங்கன்மங்களாலேயே வருந்துவர் சகலர் மூன்றுமலங்களாலும் வருந்துவார்கள் கல என்றும் வடமொழிகலை எனத்திரிந்தது. கலா என்பது கலைகளோடுங் கூடியவர்கள் எனப்பொருளுடையது. ஆகவே சகலர் என்னுஞ் சொல்லிற் கலர் என்பதன் முன்னுள்ள ஸ, என்னுமுபசர்க்கம் கலைகள் தம்மியல்பிற் குறையாது தொழில் செய்வதை உணர்த்துகின்றது. பிரளயாகலர் என்னுஞ் சொல்லிற் கலர் என்பதன் முன்னுள்ள பிர என்னும் உபசர்க்கம் தொழில் முற்றும்லயித்தலை உணர்த்துகின்றது. லயம் ஒடுக்கம் என்பன ஒரு பொருட் சொற்கள். விஞ்ஞானகலர் என்னுஞ் சொல்லில் கலர் என்பதன் முன்னுள்ள விஞ்ஞான மென்பது பேரறிவு எனப் பொருளுணர்த்துகின்றது.

சகலர் குருவினருளாற்பெற்ற சிவானுபவம் நிலைத்து விஷயங்களில் மயங்காமையைப் பெற்ருல் மாயா மலம் நீங்கிப்பிரளயாகலர் ஆவார் பிரளயாகலரிற்பக்குவர் நனவிற் சுழுத்தி யனுபவம் நிலைபெறச் செய்து பிராரத்தமாகவரும் விஷய போகந் தாக்காவண்ணம் அந்தக்கரணங்களோடுங் கூடாது

வாடாது குழைந்திருக்கப்பெற்ருல் கன்மமலம் நீங்கும். நீங்க ஆன்ம ஞானம் பேரறிவாகவிளங்க விஞ்ஞானகலர் ஆவார்கள்.

ஆணவமல மென்பது ஒரே முதலாய் அழியாததாய் மற்றைய மலங்களுக்கெல்லாம் காரணமாய்ச் செம்பிற் களிம்பு போல ஆன்மாக்கள் தோறுங்கலந்து தன்னையுங்காட்டாது. மயக்கி நின்று ஆன்மாக்களாற் செய்யப்படும் நிஷ்காமியச் சிவபுண்ணியங்களால் மாத்திரம் பரிபாகப் பட்டவிடத்து நீங்குவதாகிய அளவில்லாத சட்கதிகளையுடையதாய்ப் புண்ணியஞ் செய்தற்கு வேண்டப்படும் தனுகரணங்களைப் பெறுமளவும் அவர்களினறிவினை முற்றிலும் மறைப்பதாகும். இந்த ஆணவ மலத்தைப் பரிபாகமுறச் செலுத்துவது திரோதை என்னுமாதிசத்தியாகும். எக்காலத்தில் ஆன்மா உண்டாகின்றதோ. அப்பொழுதே ஆணவமல முளவாகும். ஆணவமுள்ள பொழுதே, மாயை, கன்மங்களு முளவாகும். ஆன்மா அரிசியையும் கன்மம் முளையையும் மாயை தவிட்டையும் ஆணவம் உமியையும் நிகர்த்தன. அரிசியை உமி மூடியிருந்தாற்ருன் அதிலுள்ள தவிடு முளையினின்றும் பயிர் தோற்றும், இஃதே போலான்மாவினிடத்தாணவ முள்ளவிடத்தே மாயை கன்மங்களினின்று மின்ப துன்பப் பயன்கள் தோற்றும். இதனை ''அல்லன்மிகவுயிர்'' என்னுஞ் சிவப்பிரகாசச் செய்யுளில்,

......................................உயிருண்டாகவே
புளதுமல மலமுளதா வொழிந்தவெல்லா
நெல்லின் முளை தவிடுமி போலனுதியாக
நிறுத்திடுவரிது சைவ நிகழ்ந்து மன்றே,

என்பதனுலினிதுணர்க. ஆணவம், பசுத்துவம், நீகாரம், மிருத்தியு, மூர்ச்சை, மலம், அஞ்சனம், அவித்தை என்பன ஒரு பொருட் சொற்கள்.

மாயா மலம். என்பது சுத்த மாயை, அசுத்த மாயை என்றிரு வகைப்படும். சுத்த மாயையாவது சிவபிரானுர் பஞ்ச கிருத்தியத்தின் பொருட்டு லய சிவர், லய சத்தி, சதா

சிவர், மகேஸ்வார் உருத்திரரென்னுங் காரணேஸ்வர்களவ தரித்தற்கிடமாகும்படி நாதமும் நாதத்தின் விந்துவும், விந்துவிற் சாதாக்கியமும், சாதாக்கியத்தில் ஈஸ்வரமும், ஈஸ்வரத்திற் சுத்த வித்தையுமாகிய பஞ்ச தத்துவங்களாகத் தோன்றுவதாயும், அந்த நாதமே சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்னுந் நான்கு வாக்குக்களாகவும் விந்துவே யந்நான்கு வாக்குக்களையுமுணர்த்துவதாகிய சாந்தி,வித்தை, பிரதிஷ்டை, நிவிர்த்தியென்னும் நான்கு கலைகளாகவும், விரிந்து தோன்றுவதாகும். விந்து சாந்தீய தீத கலையெனவும் பெயர்பெறும்.

காரணேஸ்வரராவார் பல்லாயிரங்கோடி யண்டங்களெனப்படுமுலக முழுமைக்குமொரே யதிகாரிகளாவர். காரியேஸ்வரராவார் அண்டங்கடோறும் வெவ்வேறதிகாரிகளாக விருப்பவர்கள்.

தெய்வச் சிதம்பர தேவாவுன் சித்தந் திரும்பிவிட்டாற்
பொய்வைத்த சொப்பன மாமன்னர் வாழ்வும்
புவியுமெங்கே
மெய்வைத்த செல்வமெங்கே மண்டலீசர்தம் மேடையெங்கே
கைவைத்த நாடகசாலை யெங்கே யிதுகண்மயக்கே.

என்னும் பட்டினத்தடிகள் செய்யுளின் மண்டலீசர் எனக் காட்டியிருப்பதும் இந்தக் காரியேஸ்வரர்களையேயாகும்.

ஒன்றின முடித்தறன்னின முடித்தலென்னு முத்தியால், இந்த ஐந்து சுத்த தத்துவாதிபர்களைப் பற்றியு மீண்டுச் சுருக்கிக் காட்டுகின்றனன். சுத்த வித்தியா தத்துவாதிபதியாகிய ருத்திரர், சத்தியாகிய ரௌத்திரி வாயிலாக நிவிர்த்தி கலையைப் பரிசுத்தப்படுத்தி ஞானசாதக நெறியிற் பயில்விப்பதாகிய அபரஞானத்தை மிகுவிப்பர்.

ஈஸ்வரதத்துவாதிபதியாகிய மஹேஸ்வரர் சத்தியாகிய மஹேஸ்வரி வாயிலாகப் பிரதிஷ்டாகலையைப் பரிசுத்தப் படுத்தி அபரஞானங் குறையுமாறு சிவானுபவத்தை விடாது பயில்வதாகிய பரகிரியையை மிகுவிப்பர்.

சாதாக்கிய தத்துவாதிபதியாகிய சதாசிவர் சத்தியாகிய மனோன்மணி வாயிலாக வித்தியாகலையைப் பரிசுத்தப்படுத்திச் சராசரமனைத்தினும் சிவமுடனாகி நிற்றலைக் காணும் பரஞானமும், அவ்விதமே தம்முள்ளே நிற்றலைக் காணும் பரகிரியையும் ஒப்பாகச் செய்வர்.

விந்து தத்துவாதிபதியாகிய லயசக்தி தனது சத்தி வாயிலாகச் சாந்தி கலையைப் பரிசுத்தப்படுத்திக் ''காணுங்கண்ணுக்குக் காட்டு முளம்போல்'' என்னுஞ் சிவஞான போதச் சூத்திரச் செய்யுளில் ''அரன் கழல் செல்லுதல் அயரா அன்பின்'' என்றருளியவாறே, அக்காட்சிகளுங் கழலுமாறு பர கிரியையினழுந்தச் செய்வர்.

நாததத்துவாதிபதியாகிய லயசிவர், சாந்தியதீத கலையைப் பரிசுத்தப்படுத்தி, அந்நியமின்றி அரன் கழல் சென்று மீளா வாழ்வு பெறும்படி பரஞானமே வடிவாகச் செய்வர். இவருள் ருத்திரர், மஹேஸ்வரர் இருவரும், அதிகார சிவரெனவும், சதாசிவர் போக சிவரெனவும், லயசத்தி, லயசிவ மிருவரும், சிவபோகத்தினின்றும் மீளாத வாழ்வைக் கொடுத்துப் பரமுத்தராக்கலால் லயசிவரெனவும் பெயர் பெறுவர்.

பரமசிவன் ஒருவரே ஆன்மாக்களை உய்விக்கும் பொருட்டாகப் பராசத்திக்குப் பல பெயர்களையும் புனைந்து அவற்றிற்கிசையத் தாமும் பல பெயருடையராய் விளங்கி நின்றருள்வர்.

இதனைத் தருமபுராதீனத்தைச் சார்ந்தவராயும், திருச்செந்தூர்ப் பெருமானருளனுக்கிரகம் பெற்றவருமான ஸ்ரீ குமர குருபர சுவாமிகளியற்றியருளிய திருச்செந்தூர்க் கந்தர் கலி வெண்பாவில்,

'' .............. இலயபோக அதிகாரப் பொருளாகி—ஏகத்து
உருவும் அருவும் உருவருவுமாகிப்
பருவ வடிவம் பலவாய்'' என்பதனாலுணர்க.

சத்தி என்பது சிவபெருமானது வல்லபம் என்னும் பொருளுடைய தேயல்லாமல் பெண்தன்மை உடையதல்ல, அச்சத்தி சகளீகரிக்கும்பொழுது ஆண், பெண், அலி என்னும் மூன்று வகையினுள்ளும் அளவில்லாத இயல்புகளையுடையதாகவும் நிற்குந் தன்மையை உடையதாகும்.

சிவபெருமானுனவர் உலகினர்களுக்கு அரசியலை அறிவுறுத்துபவராய் ஸ்தூலப் பிரபஞ்ச சிருஷ்டி திதியின் பொருட்டாகத் திரோதான சத்தி சகளமா யனந்த சயனத்தோடு விஷ்ணுவையும், விஷ்ணுவினுதரத்தினின்று நாபி வாயிலாக் கமலாசனத்தோடு பிரம தேவரையும் தோற்றுவித்தவர்கள் வாயிலாகத் தவப் பயனுற் கமலாசனத்தோடதிகாரம் பெற்ற உபப் பிரமராற் சிருட்டித்தலும் அனந்த சயனத்தோடதிகாரம் பெற்ற உப விஷ்ணுவால் திதித்தலும், இங்ஙனமே சிருஷ்டி திதிகள் நிகழுந்தோறும் சுத்த வித்தியாதத்துவாதி பதியாகிய ருத்திரர் வாயிலாகக் காலாக்கினி ருத்திரராற் சங்காரமுஞ் செய்வர். இந்தக் காலாக்கினி ருத்திரரின் சங்கார காலம் அதம சிருட்டியெனச் சைவாகமங்கள் குறிப்பிடுவதனுலும் மத்திய சிருஷ்டி திதி சங்காரத் தலைவர்களாகக் குணநிலையச் சிறீகண்ட ருத்திரரையே குறிப்பிடுவதனுலு மிந்த விஷ்ணுமூர்த்தி பிரமா உபவிஷ்ணு, உபப் பிரமர்களின் தோற்றங்கள் யாவும் மத்திய சிருஷ்டிக் காலத்திலென்பதே துணிபாகும். அரிதிரோதான சத்தி சகளம் என்பது, சிவலிங்கத்தின் கடைக்கூருகிய சதுஷ்கோணம் பிரம பாகமெனவும் நடுக்கூருகிய அஷ்டகோணம் விஷ்ணு பாகம் எனவும் முதற்கூருகிய விருத்தாகாரமடையவே ருந்திர மகேஸ்வர சதாசிவபாகமெனவும் சிவாகமங்கள் கூறுவதனுலுமறிக. இன்னும் மகா விஷ்ணுவானவர் தசாவதாரத்தால் முத்தொழிற்பட்டமையால் காரணேஸ்வரர்களுள் வைத்தெண்ணற் கிடமற்றவராதல் காண்க.

இனித் திரோதை என்னுஞ் சத்தி ஆணவ மலத்தைப் பரிபாகமுறச் செலுத்துவதெங்ஙனே வெனில், அந்த ஆணவ மலத்தையே நிலைக்களமாகக் கொண்டு செலுத்துவதாகும்.

இதனுலிதைத் திரோதை மலமென்றுபசரித்துச் சொல்வார்கள். இந்தச் சக்தி சிவபெருமானுடைய திருவடியைப் பெறும்பொருட்டுப் பத்தி செய்யும் ஆன்மாக்களிடத்து அவருடைய காருண்ணியமிருக்குமிடத்து அவ்விதமே திருவடிப் பேற்றிற்குபகரித்தலுஞ் செய்வதாகும். இஃதும் பஞ்ச கிருத்தியங்களிற் காத்தல் என்பதிலடங்கும்,

இவ்வாற்ருனன்ரூே இந்தச் சத்திக்கு மகாமாயி என்றும், இச்சக்தி சகளமான மஹா விஷ்ணுவுக்கு மாயன், மாயவன், மாலோன் எனவும் காரணப் பெயர்கள் வ ந் த ன வா கு ம். இதனை ''ஏகமாய்த் தங்காலவெல்லை'' என்னுஞ் சிவப்பிரகாசச் செய்யுளில்,

அறிவு முழுவதினையும் மறைக்கும்
பாகமாம் வகைநின்று திரோதான சக்தி
பண்ணுதலால் மலமெனவும் பகர்வரிது பரிந்து
நாகமா நதிமதியம் பொதிசடையானடிகள்
நணுகும்வகை கருணைமிக நயக்குந் தானே.

என உமாபதி சிவாசாரிய சுவாமிகள் கூறியுள்ளனர்.

அசுத்த மாயையாவது மஹாசங்காரக் கடவுளாகிய சிவபிரானதாணையால் அந்த அந்த யோனிகளுக்குரித்தாய்ப் பொது வகையாக ஒத்தும் சிறப்பாக ஒவ்வாதும் பிரித்தறியுமாறு காணப்படுகின்ற உறுப்புகளையுடைய தனு, கரண, புவன போகம் என்னும் நான்கு வகைத்தாய்க் காரியப்பட்டு, ஆன்மாக்கள் தோறும் தனித்தனி பொருந்தி நிற்பினும் முதலொன்றேயாய்த் தனது காரியமழியினும் தானழியாததாய். அழியாதிருந்தாலும் அருட் பிரவேசத்தால் ஆன்மாவாலன்றி அறிதலும் இயங்குதலு மில்லாத சடமாய் தனுவாதிகளாலான்மாக்களனைத்தையும் வியாபித்து நின்று துரியாதீத முதலிய அவஸ்தைகளைப் பொருந்தித் தொழிற்படுவதாய் அத்தொழிலொடுங்கவரும் பிரளய காலத்தான்மாக்களனைத்திற்கும் தங்குமிடமாய் ஆணவ மலத்துடன் அத்துவிதமாகி நிற்பதாகும்.

கன்ம மலமாவது ஆன்மாக்களெல்லாம் ஒரே மாதிரி யாகவிராது தேவர் முதற் புல்பூண்டுகளீருகிய ஏழு வகைப் பட்ட உடம்புகளை எடுத்தற்குக் காரணமாயும், எடுத்த உடம்புகளழிந்து பின்னும் பின்னுமுண்டாகும்படி செய்வத ருலேயனுதியாவதாயும் அவ்வுடம்புகளை எடுத்ததும் அன் னம், நீர் என்பவைகளை அருந்துதல் மலம், மூத்திரம் என்னு மிவைகளை விடுதல் என்னும் இவை நிகழும்படி அந்த அந்த ஆன்மாக்களுடன் கலந்து நிற்பதாயும் உழவு, தொழவு, வாணிபம், எழுத்து, சிற்பம், பரதமெனப் பற்பல வகையாக விரிந்த தொழில்களையும் அதனுலுளவான பலவகைப்பட்ட அனுபவங்களையும் அதனுலுளவாகும் விருப்பு வெறுப்புக்களை யும் அன்னதானம், வித்தியாதானம் முதலிய நல்வினைகளை யும் கொலை களவு முதலிய தீவினைகளையும் செய்தோம் செய் கின்ருேமெனப் புத்தி தத்துவம் பற்றுக்கோடாகச் சார்ந்து கிடப்பதாயும் இன்ப துன்பங்களைக் கொடுக்கும் புண்ணிய பாவங்களாயும் பிரளய காலத்திலாணவ மலத்துடனபேத மாகிய மாயாமலத்துடனடங்கிக் கிடந்து பயன் கொடுப்ப தாய்ச் சிருஷ்டி காலத்திலான்மாக்களைத் தொடர்ந்து கூடுவ தேயாம்.

இந்தக் கன்ம மலம், பிராரத்தம், ஆகாமியம், சஞ்சிதம் என மூன்று வகைப்படும். பிராரத்தம், ஊழ், தொன்மை என்பன ஒரு பொருளுடையன—

பிராரத்தமென்பது முற்பிறவிகளிற் செய்த வினைப்பயன் வரையறுத்த கால ஏற்பாட்டின்படி பிற்பிறவிகளி லான்மாக் கட்கு வந்து கூடுவதாகும்.

இஃது ஆன்மாக்கள் செய்யும் முயற்சியளவையும் அதற்கு மாறுபாடாகப் பயன் கூடியுங் குறைந்தும் வருதலானும் முயற்சியின்றியே பயன் வந்து கூடுந் தெய்வத்தன்மையானு முணரப்படும்.

ஆகாமியமாவது மறுபிறப்பிற்கேதுவா யிப்பிறப்பிலீட் டப்பட்டுத் தொடர்ந்து கூடும் புண்ணிய பாவங்களாகும்.

இப்பிறப்பிற்ருழில் செய்யும்போதும் இன்ப துன்பங்களை அனுபவிக்கும்போது முண்டாகும் விருப்பு வெறுப்புக்களே மறுபிறப்பிற்கேதுவாகும் விருப்பு வெறுப்பினுள்ளும் வெறுப் பிற்கேது விருப்பேயாதலால் ஆசையையே ஆகாமியம் என் பர்,

அவாவெனப் படுவதெல்லா உயிர்க்கு மெஞ்ஞான்றும்
தவாஅப் பிறப்பினும் வித்து. —திருவள்ளுவர் குறள்.

சஞ்சிதமென்பது ஆன்மாக்கள் செய்யுந் தொழிலினு லுண்டாகும் புண்ணிய பாவங்களுட் பாவங்களானவை கைம்மாறு கருதியாதல் இரக்கமிகுதி' நட்புமிகுதி, புகழ் மேல் வைத்த இச்சைமிகுதி யென்பவற்ருற் கைம்மாறு கரு தாதேயாதலிதலினுலும் வேதாகமங்களிற் கர்மகாண்டத்து விதிக்கப்பட்ட பிராயச்சித்தங்களைச் செய்வதனுலும் ஒவ் வோர் பகுதி ஒழியும். இவ்வாருழிந்தவைபோக மிஞ்சுவ தாகப் பிறவிகள் தோறுஞ் சேருவதேயாகும். இந்தச் சஞ்சி தம் இறைவனை நோக்கிச் சுவதந்திரம் பாராட்டிவந்த தமது குற்றத்தை மன்னித்தல் வேண்டுமென்று குறையிரப்பவர்களி டம் வலியழிந்து நின்று குருவினுற் செய்யப்படும் நிர்வாண திக்ஷையால் முற்பிறவிகள்தோறுஞ் செய்து சேர்த்து வைத் திருந்த சஞ்சிதத்தோடு கெட்டழியும். இதுபற்றி யன்ருே ஒவ்வொருவரும் தத்தம் வருவாய்க்குத் தக்க தானஞ் செய் தல் வேண்டுமென ஆன்ருேர் கட்டளை இட்டார்கள்.

அத்தமும் வாழ்வு மகத்துமட்டே விழியம்பொழுக
மெத்தியமாதரும் வீதிமட்டே விம்மிவிம்மி யிரு
கைத்தலமேல் வைத்தழு மைந்தருஞ் சுடுகாடுமட்டே
பற்றித் தொடரு மிருவினைப் புண்ணிய பாவமுமே.

என்னும் பட்டினத்தடிகள் திருச்செய்யுளில் ஆன்மா உடலைவிட்டு நீங்கிய பின்னரும் புண்ணியபாவங்கள் ஆன் மாவைத் தொடர்ந்துகொள்ளும் எனக் காட்டப்பட்டிருத் தல் காண்க. இதனுலன்ருே ஞானிகள் புலவர்கள் யாவரும் ஈகையைப் பற்றி வாய்த்த வாய்த்த இடங்களிலெல்லாம் தத்தம் நூல்களிற் கூறி வற்புறுத்தியிருக்கின்ருர்கள். இந்த

ஈகைக்கு மூலாதாரமாகவுள்ளது செல்வம். இச்செல்வமோ நிலையற்றது. செல்வம் என்னும் இச்சொல்லே எவரிடத்தும் நிலைத்திராமல் நீங்கிச் செல்லுந் தன்மையையுடையதெனப் பொருளுடையதாகும். செல்-பகுதி. அம்-கருத்தாப்பொருள் விகுதி.

நீர்க்குமி ழிக்கு நிகரென்பர் நில்லாது செல்வம்
பார்க்குமிடத்தந்த மின்போலு மென்பர்

என்பது அருணகிரிநாத சுவாமிகளருளிய கந்தரலங்காரச் செய்யுட் பகுதி. இதன் பொருள்: செல்வமானது தண்ணீரிலே உண்டாகின்ற குமிழி போன்றும் மின்னலைப் போன்றும் விரைவில் அழியுந் தன்மையை உடையது.

''உய்மின் திறைகொணர்ந்தென்று லகாண்டவ ரிம்மையே
தம்மின் சுவை மடவாரைப் பிறர்கொளத் தாம்விட்டு
வெம்மின் ஒளிவெயிற் கானகம் போய்க் குமைதின்பர்''

என்பது வைஷ்ணவ நூலாகிய திருவாய்மொழிச் செய்யுட் பகுதி. தமக்குத் தரவேண்டிய திறைப்பணத்தைத் தவருதே கொடுத்து உய்ந்து கொள்ளுங்கள் என்று சிற்றரசர்கட்கெல்லாம் ஆணை கொடுத்துப் பூமியை அரசாண்ட சக்கரவர்த்திகளும் தங்களினிமையான மனைவி மக்களைத்தானும் பிறர் கவர்ந்துகொண்டு போக விட்டுவிட்டுக் காட்டுக்குச் செல்கின்ருர்கள் என்பது இதன் பொருள்.

நீரிற் குமிழி இளமை நிறைசெல்வம்
நீரிற் சுருட்டு நெடுந் திரைகள்—நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்காள் என்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று.

இதன் பொருள்; நீர்க்குமிழியும் வாலிபத் தன்மையும், பெரிய செல்வமும், சமுத்திரத்தில் அலையும், எங்கள் சரீரமும், தண்ணீரிலே எழுதிய எழுத்தைப்போல விரைவில் அழிந்து போவனவாகும். ஆதலால் நம்மவர்களே ஏனே சிவபிரானின் சபைகளை வணங்காதிருக்கின்றீர்கள்.

அறுசுவை உண்டி அமர்ந்தில்லாளூட்ட
மறுசிகை நீக்கி உண்டாரும்—வறிஞராய்ச்
சென்றிரப்ப ரோரிடத்துக் கூழெனிற் செல்வமொன்
றுண்டாக வைக்கற் பாற்றன்று

இதன் பொருள் ஆறுவகைப்பட்ட சுவைகளுடன் கூடிய உணவுகளை மனைவியானவள் பக்கத்திலே இருந்து இனிய வார்த்தைகள் பலவற்றையும் பேசிக்கொண்டு உண்பிக்க அவ்வுணவை அருந்தும் பொழுது உமிழவேண்டியவற்றை உமிழ்ந்தும் நீக்கவேண்டியவற்றை நீக்கியும் உண்டு வாழ்ந்த செல்வர்களும் வறியவர்களாகிப் பிறிதோரிடத்திற் சென்று யாசித் துண்ணல் பிரத்தியக்ஷமாகக் காணப்படுதலாற் செல்வம் நிலையானது என்று எண்ணலாகா, என்பதாகும்.

முல்லை முகை சொரிந்தாற் போன்றினிய
பாலடி சில்மகளி ரேந்த
நல்ல கருணைபால் நால்வாயும்
பொற்கலத்து நயந்துண்டார்கள்
அல்லலடைய அடகிடுமின் ஒட்டகத்தென்று
அபர்வார்க் கண்டும்
செல்வம் நமரங்காள் நினையன்மின்
செய்தவமே நினைமின் கண்டீர்,

என்பது திருத்தக்க தேவராலியற்றப்பட்ட சீவக சிந்தாமணிச் செய்யுள் இதன் பொருள். முல்லைப் பூ மொட்டைப் போன்று மென்மையாகவும் வெண்மையாகவும் மிகவும் பக்குவமாக ஆக்கப்பட்ட பாற் சோற்றினைப் பருவ மகளிர் கொண்டு வந்து கொடுக்கப் பொற்பாத்திரத்தில் வைத்துண்ட பெரும் பிரபுக்களும் வறுமையடைந்து தமது வீட்டிலிருக்கும் பொருட்களை யடைவு வைத்தலை நேரே கண்டு கொண்டும் இனிமேலும் செல்வத்தை விரும்பாதீர்கள் தவத்தையே நினையுங்கள் என்பதாகும்.

பருதி சூழ்ந்தஇப் பயங்கெழுமா நிலம்
ஒருபக லெழுவர் எய்தியற்றே
வையமுந் தவமும் தூக்கின் தவத்துக்
கையவியனைத்து மாற்ருதாகலின்
கைவிட்டனரே காதல ரதனுல்
விட்டோரை விடா அள் திருவே
விடாஅதோ ரிவள் விடப்பட்டோரே,

என்பது சங்க நூலாகிய புறநானூற்றில் வான்மீக முனிவர் பாடிய செய்யுள் சூரியனுற் சூழப்பட்ட இந்த உலகமானது ஒருநாள் கழிவதற்கு முன்பாகவே ஏழு மன்னர்களை ஒருவர் பின் ஒருவராகத் தனக்குத் தலைவராகக் கொண்டுள்ளது, ஆதலால் உடம்பு நிலையில்லாதது செல்வம் நிலையில்லாதது உலகப் பற்றை விட்டவரிடத்து லக்ஷுமி வந்து தங்குவள் பற்று விடாதவரை விட்டு லக்ஷுமியும் ஓடிவிடுவாள்.

நின்னையேதான் வேண்டி நீள்செல்வம் வேண்டாதான்
தன்னையேதான் வேண்டும் செல்வம் போல்

என்பது நாலாயிரப் பிரபந்தத்தில் நம்மாழ்வார் கூறிய செய்யுட் பகுதி. இதன் பொருள்:

செல்வம் வேண்டாம் உனது பாதத்தையே வேண்டும் என்று விஷ்ணு மூர்த்தியை வணங்குபவர்களை இலக்ஷுமி தேவி வலியவந்தடைகின்ருள் என்பதாகும்.

இவ்வாற்ருனே நிலையில்லாததாகிய இந்தச் செல்வத்தைப் பெற்றுள்ளவர்கள் அஃதுள்ள போதே தபோதனர்கட்கும் வறிஞர்கட்கும் புலவர்கட்கும் வழங்கி நிலையுள்ள பொருளாகிய புகழை நிலைநாட்டிச் சஞ்சித கன்ம மலத்தை நீக்கி உய்தல் வேண்டும்.

ஈதலிசைபட வாழ்த லது வல்லது
ஊதியமில்லை உயிர்க்கு

என்பது தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனர் கூற்று. இதன் பொருள்: ஈதலும் அது வாயிலாகப் புகழ்படைத்து வாழ்தலுமேயல்லாது ஆன்மாக்கள் வேண்டப்படும் செல்வம் வேறென்றுமில்லை என்பதாகும்.

போஜனம் பேரிசப்தஞ்ச மேகசப்தஞ்ச துவாதச
தத்ருஞம் தானசப்தஞ்ச திரிலோக்யஞ்ச சராசரம்

முரசொலி யோசனைதூரங் கேட்கும். இடிமுழக்கம் பன்னிரண்டு யோசனை தூரம் கேட்கும். கொடுத்தவர்களின் கொடையும், அவர்களின் பெயரும் புகழும் சகல லோகங்களிலுமுள்ள சரம் அசரங்கட்கெல்லாம் கேட்கும்.

இதனுண்மையை யாமாராயும்போது கொடையாலாகின்ற கீர்த்தியோவெனின் அவ்வக்காலத்து மாத்திரமேயன்றிப் பூமியுள்ளளவும் நின்று விளங்குகின்றனவென்பதனை ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு முன்னரே கடையெழு வள்ளல்களுளொருவராய்க் கொங்கு நாட்டிற் தகடூரிலிருந்தரசாண்டவரும்,

"சிறிபகட் பெறினே எமக்கியுமன்னே
பெரிப கட்பெறினே
பாம்பாடத் தாம்மகிழ்ந் துண்ணுமன்னே

.....................................................................

அருந்தலை பிரும்பான ரகன்மண்டைத் துளையுரிஇ
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பார்வைசோர
அருஞ் சொலுண் தேர்ச்சிப் புலவர்நாவிற்
சென்று விழ்ந் தன்றவன்
அருநிறத் திறங்கிய வேலே
ஆசானெந்தை யாண்டுளன் கொல்லோ
இனிப் பாடுனருமில்லைப் பரடுநர்க்கொன்றி குனருமில்லை.

(புறநானூறு 235)

என ஔவையாரால் புகழ்ந்து பாராட்டப்பட்ட பெருமையை உடையவனுயிருந்த அதியமான் நெடுமானஞ்சி என்பவனதும்,

இதன் பொருள்: இம்மன்னன் சிறிய அளவான உணவைப் பெற்ருல் எங்கட்கே கொடுத்து விடுவான். பெரிய அளவாகப் பெற்ருல் அதனை முன்னரே எங்கட்குக் கொடுத்துப் படிக்குமாறு விட்டுவிட்டுத் தான் மகிழ்ச்சியுடன் உண்பான். இவனுடைய மார்பிலே தைத்த வேலானது பெரிய பாணர்கள் வைத்திருக்கின்ற பாத்திரங்களைத் துளைத்து இரப்பவர்களின் கைகளையும் புட்டு அவர்களின் சுற்றத்தவர்களின் கண்ணொளியையும் மழுக்கிப் புலவர்களின் நாவிலே போய் விழுந்தது. இம்மன்னன் இப்பொழுது எவ்விடத்திலிருக்கின்றனனோ, ஐயையோ இனிமேற் பாடுபவர்களுமில்லை. பாடுபவர்களுக்குப் பொன் கொடுப்பவர்களுமில்லை என்பதாகும் இச்செய்யுள். இவ்வரசன் இறந்ததன் பின்னரே கூறப்பட்டதாகும். இவ்வகைத்தான செய்யுட்கள் மன்னைக்காஞ்சி எனப்படும். ஆங்கிலத்தில் Eligi எலிஜி என்பர்.

பொதியில் மலையைச் சார்ந்த வேணாட்டை ஆண்டவனும் நாகத்தினலே கொடுக்கப்பட்ட உயர்ந்த பட்டு வஸ்திரத்தைத் தானணியாது ஆலின் கீழ்க் கோயில் கொண்டமர்ந்திருந்த இறைவனுக்குச் சாத்தி மகிழ்ந்தவனென நத்தத்தனரியற்றிய சிறுபாணாற்றுப் படையில்,

''நீலநாகம் நல்கிய கலிங்கம்
ஆலமர் செல்வர்க் கமர்ந்தனன் கொடுத்த
சாவந் தாங்கிய சாந்துபுலர் திணிதோள்
ஆர்வ நன்மொழி ஆய்''

என வியக்கப்பட்டவனும்,

''இம்மைச் செய்தது மறுமைக்காமெனும்
அறநிலை வணிகன் ஆய் அலன்''

என முடமோசி என்னும் புலவரால் (புறநானூறு 134) பாடிப் பாராட்டப்பட்ட புகழுடையோனுமாகிய வேள் ஆய் என்பவனதும்.

இதன் பொருள்: ஆய் என்பவன் பொருளைக் கொடுத்துத் தருமத்தை வாங்குகின்ற ஓர் வியாபாரி அல்லன். அவன் அது தனது கடமைகளிலொன்று என்றும் எல்லாவுயிர்களுமின்புற்

றிருக்கவேண்டு மென்றெண்ணியே கொடுத்தான் என்பதாகும்.

நவிர மலைச் சிற்றரசனுய்த் திருவண்ணுமலைக்கு மேற்கேயுள்ள செங்கைமாநகரிலிருந்தவராயும் இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகரென்னும் புலவரால், ''மலைபடுகடாம்'' என்னும் நூலினுலும் பறநானூற்றைம்பத்தொராஞ் செய்யுளினுலும் பாராட்டப்பட்ட வேள், நள்ளன் என்பவனதும்,

காரிகிளார், நெட்டிமையார், பெரும்பல்லியத்தார் என்றும் புலவர்களாற் புகழ்ந்து பாடப்பட்ட பெருமையையுடையவனும் பெருஞ் சிவபக்தனுமாகிய, பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்பவனதும் கடையெழு வள்ளல்களுளொருவராய்,

''வரை யாமரபின் மாரிபோல
கடாஅ யானைக் கழற் காற்பேகன்
கொடை மடம் படுதல் அல்லது
படைமடம் படான் பிறர் படைமயக் குறினே

(புறநானூறு 142)

எனப் பரணரென்னும் புலவரால் பாடப்பட்ட பெருமையை உடையவனுமாகிய பேகன் என்பவனதும்,

இதன் பொருள்: பேகனிடத்தில் கொடைமடம் அமைந்திருந்தது, படைமடம் இன்று என்பதாகும், கொடைமடமாவது இல்லாதவர்களுக்கும் உள்ளவர்களுக்கும் கேளாதவர்களுக்கும் கேட்பவர்களுக்கும் கணக்கிடுதலின்றி மாரிகால மழையைப் போன்று அள்ளி அள்ளிக் கொடுத்தலாகும்.

பறப்பு நாட்டை அரசாண்டவனுயும் பாண்டிய நாட்டிற் றிருப்புத்தூரையடுத்த பிரான் மலையிற் பரிஸ்வரராலயத்தை ஸ்தாபித்தவராயும் ''கொடுக்கிலாதானைப் பாரியே யென்று கூறினுங் கொடுப்பாரில்லை'' என்று சுந்தரமூர்த்தி நாயனுராலும்

பாரி பாரி என்று பல ஏத்தி
ஒருவற் புகல்வர் செந் நாப்புலவர்
பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்டு ஈண்டுல குபுரப்பதுவே,

(புறநா நூறு—107)

எனக் கபிலரென்னும் புலவரினுலும் பாடிப் பாடிப் பாராட் டப்பட்டவனுய, வேள்—பாரி என்பவனதும்,

இதன் பொருள்: புலவர்கள் எல்லோரும் பாரி ஒருவனையே புகழ்கின்ருர்கள் ஆனுல், பாரியைப் போலவே பிறரிட மிருந்தோர் பிரயோசனத்தையு மெதிர்நோக்காது, மழையும் பூமியைக் காக்கின்றதல்லவா என்பதாகும்.

நூற்றுக்கணக்காகிய சிவாலயங்களை ஆக்கிய பக்தனும் ''தென்னவனுய் உலகாண்ட செங்கணுன்காண்'' எனச் சுந்தர மூர்த்தி நாயனுராலும் புறநா நூற்று எழுபத்து நான்காஞ் செய்யுளினுலும் சேக்கிழார் நாயனுரருளிய பெரிய புராணத் தாலும் பாராட்டப்பட்ட கோச்செங்கட் சோழ மன்னரதும்,

திருஞானசம்பந்த மூர்த்தி நாயனுரருளிய
''மங்கையர்க்கரசி வழவர் கோன்பாவை வரிவளைக்
கைமடமானி
பங்கயச் செல்வி பாண்டிமாதேவி பணிசெய்து
நாடோறும் பராவ
பொங்கழலுருவன் பூதநாயக னுல்விரதமும்
அறன்களும் நல்கி
அங்கயற் கண்ணிதன்னெடுமமர்ந்த
ஆலவாயாவது மிதுவே''

எனத் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனுராற் புகழப்பட்ட மங்கையர்க்கரசியம்மையாரதும், சிதம்பராலயத் திருப்பணி யாக்கியோனுகிய இரணியவர்ம ராஜனதும், சேக்கிழார் நாயனுரருளிய பெரிய புராணத்து,

என்றும் உள்ள இந்நகர் கலியுகத்தில்
இலங்குவேற் கரிகாற் பெருவளத்தோன்

என்னுஞ் செய்யுளினுலும், உருத்திரங்கண்ணனுர் என்னும் புலவரின் பாக்களினுலும் புகழப்பட்ட கரிகாற் பெருவளவ னென்பவனதும் கொல்லிமலே யரசனுகிய ஓரி என்பவனதும், மலேயமானுகிய காரி என்பவனதும் தோட்டிமலே யரசனுகிய நள்ளி என்பவனதும் கம்பரென்னும் புலவராலியற்றப்பட்ட இராமாயண நூலில் நூறு செய்யுட்களுக்கு ஒவ்வொன்ருகப் பாடிப் புகழப்பட்ட சடையப்பவள்ளலென்பவரதும், கொங்கு தேசத்திற்கு அரசனுக இருந்தவனும்.

ஆடெரிபடர்ந்த கோடுயரடுப்பில்
ஆம்பிபூப்ப தேம்பசிஉழல
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலே
சுவைதொறுஞ் சுவைதொறும் பால்காணுமல்
குழவிதாய் முகம்நோக்க
மனேவியென்முகம் நோக்கநானும்
நின்முகம்நோக்கி வந்தனன்குமணு.

எனப் பெருந்தலேச் சாத்தனுரென்னும் புலவராற் பாடப்பட் டவனும் அதற்குப் பரிசிலாகப் புலவர் கையிற்ரும் வைத்தி ருந்த வாளாயுதத்தைக் கொடுத்துத் தனது தலேயை வெட் டிக்கொண்டு போய்த் தனது தம்பியாகிய இளங் குமணனி டத்திற் கொடுத்து அவனிடமிருந்து கோடி பொன் பெற்றுக் கொள் என மனமகிழ்ந்து கூறியவனுமாகிய குமணனென்பவ னதும், தாராபுரியிலிருந் தரசாண்டவனுய்க் காளிதாசரால் வடமொழிச் செய்யுட்களாற் பாடிப் புகழப்பட்டவனுகிய போசனென்பவனதும், மதுரை மீனுக்ஷியம்மையார் கோயிற் திருப்பணியைச்செய்வித்தவராயும், தனது மாளிகையிலிருந்து மீனுக்ஷியம்மனுலயத்திற்கு நிலத்துள் வழியமைத்து (Under ground path) அதன் மூலமாக நாடோறுஞ் சென்று சுவாமி தரிசனஞ் செய்தவராயும். பெருங்கொடைவள்ளலாயுமிருந்த திருமலே நாயக்கரதும் பெரும்புகழ் என்றும் நிலவுவதாலும், இற்றைக்குச் சில்லாண்டுகளின் முன்னரே இருந்த ஆறுமுக நாவலர், மகாவித்துவான் மீனுக்ஷி சுந்தரம்பிள்ளே யாதியோ ராற் புகழ்ந்து பாடப்பட்டவராயும், தற்கால மதுரைத் தமிழ்ச் சங்கத் தாபகருமாய, இராமநாதபுரம் பாண்டித்து

ரைத் தேவரவர்களதும் அவரது புத்திரராயும் யாழ்ப்பாணம் குமாரசுவாமிப் புலவர், டக்ரர் சுவாமிநாத ஐயர், ராகவ ஐயங்காராதியாராற் பாடிப் புகழப்பட்டவருமாகிய ராஜ ராஜேஸ்வர சேதுபதியவர்களதும், தருமபுர ஆதீன ஸ்தாபக ராகிய ஸ்ரீலஸ்ரீ ஞானசம்பந்த பரமாசாரியரவர்களதும், இவ் வாதீனத்திலடுத்தடுத்துத் தலைவர்களாயமர்ந்திருந்து ஞான வொளி வீசிய சகல பரமாசாரியர்களதும், அவர்களினுள்ளும் திருச்செந்தூராண்டவன் திருவருள் நிரம்பப்பெற்றவராய குமரகுருபர சுவாமிகளவர்களினல் பண்டார மும்மணிக் கோவை என்னும் ஞான நூலினல் போற்றித் துதிக்கப்பட்ட நான்காவது குருமூர்த்தியாகிய மாசிலாமணி தேசிக பரமா சாரியர் அவர்களாலும், பற்பல புலவர்களினுலும் ஞானிக ளாலும், யோகிகளாலும், எம்மாலும் பாடியும் புகழ்ந்தும் போற்றியும் பாராட்டப்பட்ட இருபத்து நான்காவது குரு மூர்த்தியாகிய சண்முக ஞானசம்பந்த பரமாசாரியரவர்கள தும் நம்மீழ மண்டலத்திலேயுள்ள சிவாலயங்கடோறுமொவ் வோர் திருப்பணி செய்வித்தல் வேண்டுமென்னும் பேரவாக் கொண்டு நல்லூர்க் கந்தராலயம், முனிஸ்வராலயம், மரு தடி விநாயகராலய மாதியவற்றிலொவ்வோர் திருப்பணி செய்வித்தவராயும், மற்றைய பல ஆலயங்கட்குறு துணையா கப் பொருளுதவியவராயும், நல்லூரிலோர் மடத்தைக் கட் டுவித்து நடாத்தினவருமாயும், சுவாமி வேதாசலம், டக்ரர் சுவாமிநாத ஐயரவர்களாற் பாடப்பட்டவராயும்,

ஈட்டமுறு

நீதிதயை பொறுமை நீடுகொடை வாய்மை முதல்
ஓதுபல சற்குணங்க ளூற்றிருப்போன்—சீதரநேர்
மாபிரபு மூத்ததம்பி''

என மகா வித்துவான் குமாரசுவாமிப் புலவரவர்களாலும்,

ஏறுகலைத் திங்கள்போ லெல்லாக் கலைகளையும்
வீறுபெறக் கற்று விளங்குவோன்—கூறுதமிழ்
ஆங்கிலமாம் வாரிதியும் ஆசமித்துவிற் றிருப்போன்
ஈங்கெவரு மொப்பில்லா வேறனையான்

—பாங்கின்

உடுக்கப் பழகுமுன்னே யூரிலுள்ளார்கட்குக்
கொடுக்கப் பழகுங் கொடையான்—மடுத்துணவு
உண்பதனுக் குள்ளே உமாபதியின் பொற்ருளை
எண்ணுவதற்குப் பயின்ற ஏராளன்

—நண்ணிநண்ணி

ஓராயிரம் புலவோ ரோதினும் பாயிரங்கள்
நேராகாதோங்கு நெடுங்கீர்த்திப் பேராளன்

........................................................................

........................................................................

........................................................................

சூழ்பூதி கண்டிகைசேர் தூய்மைகொண்டான்—ஏழ்மேகம்
போலக் கொடுத்துவரும் புண்ணியனு மூத்ததம்பி

என நவநீத கிருஷ்ணபாரதிப் புலவராலும் புகழ்ந்து பாராட்டப்பட்ட கொழும்பு மூத்ததம்பியவர்களதும், கிரி மலையிலும் கதிர்காமத்திலுமொவ்வோர் மடத்தினையாக்கி அன்னதானமளித்து அவைகளென்றும் நின்று நிலைபெறு மாறு பெருநிதியுமாக்கி வைத்த பெருங் கொடையாளராகிய K. V. மார்க்கண்ட முதலியாரவர்களதும் பெரும் புகழ் இன்றும் என்றும் நிலவுவதாலும் கொடையாலாகுங் கீர்த்தி பிரத்தியக்ஷப் பிரமாணமாகும்.

ஈத்துவக்குமின்பம் அறியால்கொல்தா முடமை
வைத்திருக்கும் வன்கணவர்.

என்பது தெய்வப் புலமைத் திருவள்ளுவர் குறள். பிறருக்குக் கொடுக்காத குணமுடையவர்களாய்ப் பொருளைச் சேமித்து வைத்திருக்கின்ற கொடியவர்கள் கொடையினுலுளவாகும் இன்பத்தை யறியார்கள் போலும்,

ஒருவன் தான் எவ்வித வறுமை நிலைமையடைந்திருந்தாலும் தம்மிலும் வறுமையுற்று வாடித் தேடி வந்திருப்பவர்களுக்கில்லையென்னுது யாதாயினுங் கொடுத்தல் வேண்டுமென்பதே பல நூல்களினதும் முடிவாகும்.

இம்மிபரிசித் துணைபானும் வைகலும்
நும்மினியைவ கொடுத் துண்மின்

என்பது திருவள்ளுவர் கூற்று. இதன் பொருள்; நாடோறு முங்களாலியன்றளவு மிகச் சிறிய அளவாயினுமிரப்பவர்கட்குக் கொடுத்தே உண்ணுங்கள் என்பதாகும்.

ஒல்லும் வகையா லறவினையோ வாதே
செல்லும் வாயெல்லாஞ் செயல்.
— வள்ளுவர் குறள்.

இல்லாவிடத்து மிசைந்த வளவின
லுள்ளவிடம் போற் பெரிதுவந்து—மெல்லக்
கொடையொடு பட்ட குணமுடை மாந்தர்க்
கடையாவா மாண்டைக் கதவு.

என்பது நாலடியார்ச் செய்யுள். இதன் பொருள்: பொருள் மிகுதியுமில்லாதவிடத்திலுந் தம்மாலியன்றளவு மனம் மிக மகிழ்ந்து கொடுக்கின்ற பெருங் குணமுடையவர்களுக்கு முத்தியாகிய வீட்டின் கதவு திறந்தேயிருக்கும் என்பதாகும்.

''அவஸ்ய மனுபோக்தவ்யம் இறுதம் கர்மசுபாசுபம்
அநாத தோஷேன பவேத் தரித்திர:

இதன் பொருள்: மானுடர்கள் முற்பிறவிகளிலே செய்த கர்மங்கட்கிணங்கச் சுகதுக்கங்களை யனுபவிக்கின்றார்கள். முன்னரே தருமங் கொடாத குற்றத்தாற் தரித்திரர்களாகின்றனர். இப்பிறப்பிற் பெரும் பொருள் வைத்துக்கொண்டு தர்மஞ் செய்யாதவர்கள் மறுபிறப்பிற் பெரும் தரித்திரர்களே என்பதாகும்.

அருணகிரிநாதரவர்கள் தமது கந்தரலங்காரத்தில் முருகப் பெருமானைப் பூசை செய்வதனாலாகும் பயன் துன்பமடையுங் காலத்து வந்துதவுந் தன்மையை யுதாரணமாகக் காட்டி அதனையே போன்று இரப்பவர்களுக்குதவிய பலனாவது தவறாதே வந்துதவி செய்யுமென்றும், இங்ஙனே தருமஞ் செய்யாது சேமித்து வைத்திருக்கின்ற பொன், பணம் முதலியனவும், அழகு வாய்ந்த மாளிகைகளும், மனைவி மக்களும் ஈற்

றில் உடம்பை விட்டுவிட்டுப் போகின்ற தனி வழிக்குதவ மாட்டா எனவும் கூறியுள்ளனர்.

பெகங்கார வேலையில் வேலைவிட்டோ னருள்போலுதவ
எங்காயினும் வருமேற்பவர்க் கிட்டதிடாமல் வைத்த
வங்காரமு முங்கள் சிங்கார வீடு மடந்தையருஞ்
சங்காதமோ கொடுவிருயிர் போமத் தனிவழிக்கே

இஃதேயல்லாது இந்த அருணகிரிநாதரவர்கள் ஒருமுறை முருகக் கடவுளை நோக்கி, வறியவர்களுக்குக் கொடுக்கத்தக்க தாகப் பெருஞ் செல்வனுகத் தன்னைப் படைக்கவில்லையே என்றுங் குறை இரந்திருக்கின்றனர்.

சாகைக்கு மீண்டு பிறக்கைக்குமன்றித் தளர்ந்தவர்கொன்
றீகைக்கெனை விதித்தாயிலை

இதுவேயல்லாது பொருளுள்ளவர்கள் உள்ளபொழுதே முருகக் கடவுளை வாழ்த்தி யிரப்பவர்கட்கீதல் வேண்டுமென்றும் அப்படியே கொடுக்காதவர்கள் பணத்தைப் புதைத்து வைத்திருந்து பின்னரே திருடர்களுக்குக் கொடுத்து மனத் திகைப்படைந்து தேகம் மெலிந்து வாடித் தங்கள் வாழ்நாட் களை வீணுகக் கழிப்பவர்களே என்றுங் கூறியுள்ளார்.

வேடிச்சி கொங்கை விரும்புங் குமரனை மெய்யன்பினுல்
பாடிக் கசிந்துள்ளபோதே கொடாதவர் பாதகத்தால்
தேடிப் புதைத்துத் திருட்டிற் கொடுத்துத் திகைத்திளைத்து
வாடிக் கிலேசித்து வாழ்நாளை வீணுக்க மாய்ப்பவரே.

ஈண்டு முருகக் கடவுளை வாழ்த்திக் கொடுக்கவேண்டு மென்ப தென்னையோ வெனின், சிவோ தாதா சிவோ போத்தா, சிவ ஸ்சர்வமிதம் ஜகத் என்னும் வேத வாக்கியத் தின்படியே யீபவன் தான் கொடுப்பவனென்றெண்ணுது தன்னுள் ளந்தர்யாமியாக நிற்குஞ் சிவபிரானே யீபவ னென்று மேற்பவன் முனேற்பவனென்றெண்ணுது தன்னுள் ளந்தர்யாமியாகி நிற்குஞ் சிவபெருமானே யேற்பவனென் றும் பாவனை செய்தல் வேண்டுமென்பதற்காகவேயாகும்.

இதனுலாகும் பயனுவதியாதெனிலிவோனுலீயப்படும் பொருளோரோர்காற் பாவ வழியா லிட்டப்பட்டதாயினது கொண்டேற்றேன் செய்யுஞ் சற்கருமஞ் சித்தி பெருதாத லானு மேற்பேனுமோரோர் கால் வறுமை நிமித்தமென்ரு வது, மடாலய வித்தியாலயங்களாக்கல், கிணறு குளந் தோண்டல், அன்னதானஞ் செய்தல், கன்னிகாதானஞ் செய்தலென்ருவது கூறி யேற்றுக் கொண்டு போய்ச் சுர பானம், வியபிசாரம், கொலே முதலிய தீய வழிகளிலுப யோகிப்பானுயி னிவற்ருலாகும் பாவங்களிலோர் பகுதி யீந் தோனைச் சாருமாதலினுலு மிவ்விரு பாலாருந் துன்புருதிருத் தற் பொருட்டேயாகும். இக்கருத்தினைக் கொண்டே பட்டி னத்தடிகள்,

> ''உடுப்பானும் பாலன்னமுண்பானு முய்வித்தொருவர் தம்மைக்
> கெடுப்பானுமேதென்று கேள்வி செய்வானுங் கெதிஅடங்கக்
> கொடுப்பானுந் தேகியென்றேற்பானு மேற்கக் கொடாமல் நின்று
> தடுப்பானும் நியல்லேயோ தில்லையாநந்தத் தாண்டவனே''

என்று கூறியருளினுர். இதன் பின்னரும் அருணகிரிநாதரவர் கள், வள்ளி மணுளனே, சண்முகா என்று சொல்லி அதனைப் பிறருக்குங் கொடுத்து தாமுமுண்ணல் வேண்டுமென்று கூறி யுள்ளனர்.

> பொருபிடியுங் களிறும்விளையாடும் புனச்சிறுமான்
> தருபிடி காவல சண்முகவா வெனச்சாற்றி நித்தம்
> இருபிடி சோறுகொண்டு இட்டுஉண்டு

என்பது கந்தரலங்காரம். இதன் பின்னரும் அவர் கூர்மை பொருந்திய வேற்படையை யுடையவராகிய முருகக்கடவுளை வாழ்த்தி மிகச் சிறிய அளவுடையதாகிய நொய்யரிசியினும் பாதியாவது வறியவர்களுக்குப் பகிர்ந்து கொடுங்கள் உங்கள் சரீரத்தின் நிழலானது வெய்யிற் காலத்தில் உங்களுக்கு

ஒதுங்கியிருப்பதற்கு வசதி கொடுக்கின்றதா? அதேபோன்று நீங்கள் தருமஞ்செய்யாது வைத்திருக்கின்ற திரவியங்களானவை உங்களின் கடைசிப் பிரயாணத்திற்கு உதவாது எனக் கூறியுள்ளார்.

''வையிற் கதிர்வடிவேலோனை வாழ்த்தி வறிஞர்க்கென்றும்
நொய்யிற் பிளவளவேனும் பகிர்மின்கண் நுங்கட்கிங்ஙன்
வெய்யிற் கொதுங்க உதவாஉடம்பின் சிறுநிழல்போற்
கையிற்பொருளும் உதவாது காணும் கடைவழிக்கே.

இஃதேயல்லாது தடுங்கோண்மனத்தை என்னுஞ் செய்யுளில் ''தானமென்று மிடுங்கோன்'' என்றும் எவ்வகைப்பட்ட கருமங்களையுஞ் செய்வதற்கு மனமே பிரதானமாக இசைய வேண்டுமாதலாற் தனது மனத்தினையே முன்னிலைப்படுத்தி நீ, பழனி என்னுந் திருத்தலத்தின் மகிமையைப் படிக்கின்றாயில்லை அல்லது அங்ஙனமே படிக்கின்ற அடியவர்களின் பாதங்களிலே விழுந்து வணங்கின்றாயில்லை முருகா, முருகா, என்றலறுகின்றாயில்லை. பிறர் வாடி வருந்தாவண்ணம் அவர்களுக்குக் கொடுத்து அந்தக் காரணங் கொண்டே நீயும் வறுமையை யடைந்தாயில்லை. பேரானந்தங் கொண்டு நடனஞ் செய்கின்றாயில்லை. ஆதலால் இனி எனக்குத் தஞ்சமாகவுள்ளது என்னதானோ என்று வருந்துகின்றார்.

படிக்கின்றிலை பழனித் திருநாமம் படிப்பவர்தாள்
முடிக்கின்றிலை முருகாவென்கிலை முசியாமலிட்டு
மிடிக்கின்றிலை பரமாநந்த மேற்பட விம்மிவிம்மி
நடிக்கின்றிலை நெஞ்சமே தஞ்சமேது நமக்கினியே.

இனி நம் பட்டினத்தடிகளோவெனின், கொடுக்குங் குணமில்லாத வன்நெஞ்சர்கள் இருந்தாலும் என்ன, அல்லது அவர்கள் இறந்து போனாலுமென்ன என்று சினந்து கூறியுள்ளார். அஃதோடமையாது இறைவனை முன்னிலைப்படுத்தி இந்த லோபிகளை, எதற்காகவோ பூமியிற் படைத்தாய் என்றும் இரந்து குறைவேண்டியுள்ளனர்.

கல்லார் சிவகதை நல்லோர் தமக்குக் கனலிலுமெய்
சொல்லார் பசித்தவர்க் கன்னங்கொடார் குருசொன்னபடி
நில்லா ரறத்தை நினையார் நின்நாமம் நினைவிற்சற்றும்
இல்லாரிருந்தென் இறந்தென் புகல் கச்சியேகம்பனே.

இதன் பொருள்: சிவபுராணங்களைப் படிக்காதவர்களும் உண்மை பேசாதவர்களும் பசித்து வருபவர்களுக்கு உணவு கொடாதவர்களும் தருமஞ் செய்யாதவர்களும் பஞ்சாக்ஷர செபஞ் செய்யாதவர்களுமாகிய இவர்கள் இறந்தாலு மென்ன இருந்தாலுமென்ன என்பதாகும்.

நாயாய்ப் பிறந்திடில் நல்வேட்டையாடி நயம்புரியுந்
தாயார் வயிற்றில் நரராய்ப்பிறந்து பின்சம்பன்னராய்க்
காயாமரமும் வறளாங்குளமுங் கல்லாவுமென்ன
ஈயாமனிதரை யேன்படைத்தாய் கச்சியேகம்பனே.

இதன் பொருள்: நாயோவென்றுல் வேட்டையாடி மனிதர்களுக்கு நன்மையைச் செய்கின்றது. உயர் திணையாகிய மானுடர்களுட் சிலர் பெருஞ்செல்வர்களாகவிருந்தும் காய்க்காத மரங்களையும் தண்ணீர் வற்றிய குளங்களையும் கல்லினுலே செய்யப்பட்ட பசுக்களையும் போன்று ஈதல் என்னும் பெருங்குணமில்லாதவர்களாகி வாழ்கின்ருர்கள் இப்படிப் பட்டவர்களை ஏனே படைத்தாய் என்பதாகும்.

இன்னும் இந்த ஈகையைப் பற்றி யனேக நூல்களில் மிக விரித்தெடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. அவைகளை யெல்லாமெடுத்தெடுத்திவ்விடத்திற் காட்டப் புகின் மிக விரியுமாதலாலிதனை யித்துணையில் விடுத்துச் சிவபெருமானுனவர் மூன்று திருக்கரங்களினுலும் இரண்டு திருக்கால்களினுலும் பஞ்ச கிருத்தியம் செய்கின்றனரென முன்னரே கூறியமையினை மேற்கோள் கொண்டு சந்றே விளக்குகின்றனன்

தோற்றந் துடியதனிற் ருேயுந்திதி யமைப்பிற்
சாற்றியிடு மங்கியிலே சங்காரம்—ஊற்றமா
யூன்றுமலர்ப் பதத்தி லுற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு

என்பது, திருவதிகை மனவாசகங் கடந்தாரியற்றியருளிய உண்மை விளக்கச் செய்யுள், இதன் பொருள்: தமருகந்தாங்கிய கையாற் படைத்தல் அபயக் கையினாற் காத்தல் அக்கினி ஏந்திய கையாலழித்தல் ஊன்றிய திருக்காலால் மறைத்தல் தூக்கிய திருக்காலால் அருளல் என்பதாகும்.

இனி, இந்தச் சிதம்பர ஆநந்ததாண்டவத்தைப் பற்றி,

குடமுழா வாண னிராயிரங் கரங்கொண்டு
　　　குமுறு வெனவே முழங்க
கொண்டலிநிறக் கடவுள் மூழவொலி முழக்க
　　　விரி கோகனக மாளிகையினான்
தடமருவு கைத்தாள நற்றொனி முழக்கவந்
　　　தமருகந் தொனி முழங்கத்
தாரளி முழங்க மறை நூபுர மூழக்கவிரு
　　　தாள்கள் தாளம் முழக்க
வடநதிபிரைக்க மணியரவு களிரைக்க
　　　உழையலற முயலக நெளிவுற
ஆடக மணிச்சபையி னடகமிளைத்துமைக்
　　　கன்புசெயு மின்ப வடிவோன்

என்பது திருப்போரூர்ச் சந்நிதி முறைச் செய்யுள் இதில் வாணன் குடாமுழா அடித்தல் மகாவிஷ்ணு மூர்த்தி முழாவடித்தல் சுட்டிக்காட்டப்பட்டிருத்தல் காண்க, தார்+அளி முழங்க என்பது, மாலையிலேயுள்ள பூக்களிலிருக்கின்ற வண்டுகளின் சத்தம். மறை + நூபுரம்—வேத ஒலி, வடநதி—கங்கை, அரவு—பாம்பு—உழை—மான்—ஆடகம்—பொன்—ஆடகமணிச்சபை. சிதம்பரத்திலேயுள்ள கனகசபை.

இந்தச் சிதம்பரம் ஞானயோகஸ்தலமாதலாலிங்குச் சென்று பெருமானாரடிகளை வணங்கினோர் சிவன் முத்தர்களாவார்.

பிறந்திலமாரூர் தன்னிற் பேசிய காசிமேவி
பிறந்திலமிரண்டு முத்திபின்பமும் பின்பதாநா
முறைந்திடுந் தில்லைஞான போகமார் தானமாமால்
செறிந்தபடிகாணச் சிவன் முத்தராய்த் திரிபலாமே

என்னுங் கோயிற் புராணச் செய்யுளிதனை வலியுறுத்துதல் காண்க. சீவன் முத்தராவார் யான், எனது என்னும் விகற்பம் பற்றிப் பசுகரணமாய்ப் பயில்வதின்றிச் சிவகரணமாய் உடையானுடைமைப் பொருளுமாய்த் தற்செயலற்றுச் சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந்து நிற்பவர். அஃதாவது இவர்கள் நேரே சிவப்பிரகாசமுமின்றி, நேரே திரோதாயினுடைய மறைப்புமின்றிப் பிராரத்துவ கன்மம் புசித்து, சூரியனுடைய பிரகாசமானது இடையிடையே முகில்களால் மறைப்புண்டு பின்னர் அம்முகில்கள் அகன்றுவிட மீட்டும் பிரகாசமாகவிருக்குந் தன்மை போலத் தேகாந்த காலத்தே சிவசொரூபத்தைக் கூடிக் கலந்து வேறற நிற்பர்.

தெரிவரிய மெஞ்ஞானஞ் சேர்ந்தவாறே
சிவம்பிரகாசிக்கு மிஃதே சீவன் முத்தராவார்

என்பது சிவஞான சித்திச் சூத்திரப்பகுதி.

இப்பெருமானுர் கங்காநதியை யணிந்தமை அதுபூமி முழுவதும் மிகப் பெருகிப் பாய்ந்து நாட்டையழித்துப் பெருங்கேட்டைச் செய்யுமந் நதி போன்றே யகங்காரமும், மல பரிபாகம் பெருத வான்மாக்களிடம் பொருந்திப் பிறரைத் துன்புறுத்துவதற்கும், பாம்பையணிந்தமை பொன்போல் விளங்குதலைக் கண்டு விரும்பிக் கிட்டிச் சார்ந்தவிடத்துத் தனது சிற்றத்தைக் கேட்டும் விட்டு விலகியோடாதாரை யறிவுமயக்கத்தக்க விஷத்தையுடைய பாம்பைப் போன்றே யவ்வகங்காரந் தோன்றத் தோற்றும் விஷயமுமின்பமெனக் கருதி யடுத்தவிடத்து மயக்குதலையும், ஆதலாலதைச் செய்யாதொழியாதனுபவிப்போமென முயல்வாரை யறிவழித்துத் துன்பமடையச் செய்தற்குவமானமெனக் காட்டலும், நடன காலத்திலிவைகளசைதல் நிர்த்த தரிசனஞ் செய்பவர்கட்க ங்காரமுமதனாலுண்டாம் விஷயமு மசைந்தழிந் தொழியுமென்பது முட்பொருளாமென்பர்.

இனிப் பஞ்ச கிருத்தியங்களாவன; சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபாவம், அனுக்கிரக மென்பனவாகும். இவை

முறையே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளலெனவும் பெயர்பெறும்.

சிருஷ்டியாவது (படைத்தல்) முதற் காரணத்திலிருந்து காரியத்தை வெளிப்படுத்தலும், சேதனர்களுக்குத் தேகங் களைக் கூட்டி மறைந்திருந்த அறிவு இச்சைத் தொழில்களை வெளிப்படுத்தலுமாகும். அசேதன சிருஷ்டியுள் மாயை முத லிய காரணத்திலிருந்து மண முதலிய தத்துவங்களைப் பிறப் பிப்பது தத்துவ சிருஷ்டியெனவும், தத்துவத்திலிருந்து போக தேகமாகிய தாத்துவிகங்களைப் பிறப்பித்தல் தாத்து விக சிருஷ்டியெனவும் பெயர்பெறும். தாத்துவிகமென்பது தத்துவத்தின் காரியமாகும்.

திதியாவது, (காத்தல்) வெளிப்படுத்தப்பட்ட காரியப் பொருள்களைத் தத்தந் தொழிலிலே நிலைபெற நிறுத்தலும், தேக சம்பந்தமுடையராகிய சேதனர்களைத் தத்தம் விடயங் களிலே முயற்சிக்க நிறுத்தலுமாம்.

சங்காரமாவது (அழித்தல்) காரியங்களை முதற் காரணத் தில் மறைத்தலும், சேதனர்களுக்குத் தேகங்களைப் பிரித்து அறிவு இச்சைத் தொழில்களை மறைத்தலுமாகும்.

திரோபாவமாவது (மறைத்தல்) பாசங்களுக்குச் சாமர்த் தியமுண்டாக்குதலாகிய வனுக்கிரகத்தைச் செய்து, அதனுற் சேதனர்களை யேற்ற போகங்களைத் தவருதுண்ணும்படி தடுத்தல்.

அனுக்கிரகமாவது (அருளல்) பாசங்களுக்குச் சாமர்த்தி யந் தடுத்தலாகிய திரோபாவத்தைச் செய்து, அதனுற் சேத னர்களுக்குக் கலப்பில்லாத சுத்த ஸ்வரூப சாமர்த்தியமுண் டாகும்படி தீக்ஷையாலுபகரித்தல்.

இவ்வைந்து தொழில்களுளனுக்கிரகமொன்றே மோக்ஷத் திற்குக் காரணம். முன்னைய நான்கும் போகத்திற்கும், கரும நாசத்திற்குங் காரணங்களாகும். எனவே, முன்கூறியபடியே

யிந்த வனுக்கிரகந் தூக்கிய பாதநிர்த்தமாகும். இக்காரணங் கொண்டே யிறைவனை வணங்கும் போதவரின் திருவடிகளையே விசேஷமாக வணங்கல் வேண்டுமெனக் கூறப்பட்டிருக்கின்றது. இறைவனின் திருவடிகள் நம்மனோரின் சிரசிற் படுதலையே பாததீக்ஷை என்பர். முருகப் பெருமானாரின் திருவருள் பெற்ற அருணகிரிநாத சுவாமிகள் கந்தரலங்காரத்தில், ''கால்பட்டழிந்த தென்றலை மேலயன் கையெழுத்தே'' என்றும், ''எழுகடல் மணலை யளவிடினதிகம்'' என்னுந் திருப்புகழில் ''கடுகியுன்னடிகள் தருவாயே'' என்றுமின்னும் பற்பல விடங்களிலுங் கூறியுள்ளனர். நாம், குரு பெரியோர்களின் பாதங்களில் வீழ்ந்து வணங்குவது மிக்கருத்துப்பற்றியேயாகும்.

நாம், முத்தியடையவேண்டுமேயாயின் ஆதி நூல்களாகிய வேதாகமங்களிற் கூறிய தீக்ஷை, சரியை, கிரியை, யோகம், ஞானமென்னுமிவைவாயிலாகவே யடைதல் வேண்டும். தீக்ஷை என்பது ஆன்மாக்களுடைய பாசத்தைக் கெடுத்துச் சிவத்துவத்தைக் கொடுப்பதாகிய சிவசத்திக் கிரியையேயாம், தீ—கெடுப்பது எனவும், க்ஷை—கொடுப்பது எனவும் பொருள் படும். ஆன்மாக்களின் மல பரிபாக வேறுபாட்டாற் தீக்ஷையும் பலவகைப்படும். ஆதிகுருவாகிய சிவபெருமானனவர் விஞ்ஞானகலர்க்கருளே யுருவாகி, மீன் தனது கருவைப் பார்த்து மீனுக்குந் தன்மை போன்று திருநோக்காகிய தீக்ஷையாலும், பிரளயாகலர்க்குத் தேவ வடிவுடையராய் முன்னின்று திருநோக்கம், முட்டையைப் பறவை தன் சிறகுளடக்கிப் பறவையாக்குந் தன்மை போன்று தமது திருக்கரங்களாலுந் திருப்பாதங்களாலுந் தீண்டுதலாகிய பரிசம், சகச நெறியை விளக்குவதாகிய வாக்கென்றும் மூவித தீக்ஷைகளாலும், சகலர்க்கவரவர் பக்குவங்கட்கேற்ப மானுட வடிவுடையராகவும், மானுட ஞானசாரியரை யதிட்டித்துந் தீவிர தர பக்குவமுடையவர்கட்குத் திருநோக்கம், பரிசம், வாக்கு, யோகிருந்து காட்டலென்னும் பாவனையாகிய நான்குவித தீக்ஷைகளாலும், தீவிர பக்குவமுடையவர்கட்குத் திருநோக்கம், பரிசம், வாக்கு, பாவனை, ஆகம முடிவாகிய நூற்

போதனை யென்னுமைந்துவித தீக்ஷைகளாலும், மந்தபக்குவமுடையவர்கட்குத் திருநோக்கம் பரிசம் வாக்கு பாவனை நூற்போதனை யோகிருத்திக் காட்டலென்னு மாறுவித தீக்ஷைகளாம், மந்ததரபக்குவமுடையவர்கட்குத் திருநோக்கம், பரிசம் வாக்கு பாவனை நூற்போதனை யோகிருத்திக்காட்டல், ஓமசம்பந்தமுடையதாகிய ஒளத்திரியென்னுமேழுவித தீக்ஷைகளாலுமனுக்கிரகஞ் செய்வர். இந்த ஒளத்திரிதீக்ஷை கிரியாவதி ஞானவதியென விருவகைப்படும் அதனுள்ளுஞ் சமய விசேஷ நிர்வாணமென மூவகைப்படும்.

ஆதி குமரகுருபர சுவாமிகளியற்றியருளிய திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பாவிற் சகலர்க்கருள் புரியும் முறைமையை,

.................................................... இருள் மலத்துள்
மோகமுறும் பல்லுயிர்க்கு முத்தியளித்தற்குமல
பாகமுறவே கடைக்கண் பாவித்து ............ ...........
............................................... ................ பிறியாக்
கருணை திருவுருவாய்க் காசினிக்கே தோன்றிக்
குருபரனென்றோர் திருப்பேர் கொண்டு—திருநோக்கால்
ஊழ்வினையைப் போக்கி யுடலறுபத்தெட்டு நிலம்
ஏழுமத்துவாக்கள் இருமூன்றும்—பாழாக
ஆணவமான படலங் கிழித்தறிவிற்
காணரிய மெஞ்ஞானக் கண்காட்டிப்—பூணும்
அடிஞானத்தாற் பொருளு மான்மாவுங் காட்டிக்
கடிபார் புவனமுற்றுங் காட்டி—முடியாது
தேக்குபர மாநந்தத் தெள்ளமுதமாகி யெங்கும்
நீக்கமநின்ற நிலைகாட்டிப்—போக்கும்
வரவும் நினைப்பும் மறப்பும் பகலும்
இரவுங் கடந்துலவா வின்பம்—மருவுவித்து

எனவும்,

பிரளயாகலர்க் கருள் புரியும் முறைமையை
கன்மமலத்தார்க்கு மலர்க்கண் மூன்றுந் தாழ்சடையும்

வன்மழுவும் மானுமுடன் மால்விடைமேல்—மின்னிடத்துப்
பூத்தபவளப் பொருப்பொன்று வெள்ளிவெற்பில்
வாய்த்தனைய தெய்வவடிவாகி—மூத்த
கருமமலக் கட்டறுத்துக் கண்ணருள் செய்து

எனவும்,

விஞ்ஞானகலர்க்கருள் புரியும் முறைமையை,

.......................................................... உண்ணின்று
ஒருமலத்தார்க் கின்ப முதவி''

எனவுங் குறிப்பிட்டிருத்தல் காண்க.

பிரளயாகலர் விஞ்ஞானகலர்கட்கிவ்விதமாய தோற்றங் களுந் தீக்ஷைகளுமுண்டென்பதனையுஞ் சகலர் பக்குவம் வந்த காலத்துப் பிரளயாகலராகிப் பின் விஞ்ஞானகலராவரென்ப தனையுமுதாரண முகத்தால் விளக்குகின்றனன். சீர்காழிச் சிவஸ்தலத்திற்றிருக்குளக்கரையிற் பிரளயாகலராகிய திரு ஞானசம்பந்த மூர்த்தி நாயனாரவர்கட்கு முன்னர்ச் சிவபிரா னுமாதேவியாருடனிடபவாகனத்தின் மீதெழுந்தருளிக் காட்சி கொடுத்தமை தோற்றம், ஆங்குளவாய அருட் பார்வை திருநோக்குத் தீக்ஷை, கண்ணீர் துடைத்தமை பரிச தீக்ஷை பாலுண்கவென்றமை வாக்குத் தீக்ஷை, சுந்தரமூர்த்தி நாயனாருக்கு முன்னரிடபவாகனருடராகத் தோன்றி யமை, மானுடப் பிராமணராகத் தோன்றியமை தேவவடிவ மானுடவடிவத் தோற்றம், அடிமையோலை பறிக்கும் பொழுது மற்கட்டியமை பரிச திட்க்ஷை, ஆங்குளவாயவருட் பார்வை.

## திருநோக்குச் திட்க்ஷை

சைவ சமயத்தவர்களாகிய நாங்கள் சிவபெருமானை வழி படும் வகைகள் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்காகும் இவை முறையே தாதமார்க்கம் சற்புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் எனவும் பெயர்பெறும் இந்த நிலைகளிலேயே நின்று வணங்குபவர்கள் சாலோகம்,

சாமீபம், சாரூபம், சாயுச்சியம் எனப்பெறும் முத்திகளையடை வார்கள் கூலிவேலை செய்பவர்கள் செய்விக்கும் முதல்வனிருக் குமிடத்தை அடைந்து நிற்கின்ற தன்மையே போன்று சரியை யாளர்கள் சிவலோகத்தை அடைந்து இருத்தலால் இந்தச் சரியை தாதமார்க்கம் எனவும், பிள்ளைகள் பெற்றோரை அடைந்து அவர்களின் மடியில் ஏறியிருக்கின்ற தன்மையைப் போலவே கிரியையாளர்கள் சிவசாமீபத்தை அடைந்து இருத் தலால் சற்புத்திரமார்க்கமெனவும் தோழன் தோழனை அடைந்து கைகோத்து நிற்கும் தன்மையையே போன்று யோகர்கள் சாரூபத்தையடைதலால் அந்தயோகம் சக மார்க்கமெனவும் தலைவி தலைவனை அடையுமாறு போல் ஆன்மாக்கள் சிவபெருமானாகிய இறைவனை அடைந்து இரண் டறக் கலந்து ஒன்றேயாய் நிற்கும் சுத்தாத்துவிதப் பேரின்ப முத்தியை ஞானிகளடைதலால் இந்த ஞானம் சன்மார்க்க மெனவும் பெயர் பெற்றன. இந்தச் சரியை, கிரியை, யோகம் என்னும் மூன்றும் ஞானமடைதற்குக் காரணங்களாகும்.

"உரைசெயிற் பரமஞானம் ஒன்றுமே முத்திக்கேது
சரியைநற் கிரியை யோகம் தானொருமூன்றும் ஞான
மருவுதற் கேதுவென்று மறைவிளம் பிடுமால்

என பிரபுலிங்க லீலையிற் கூறியிருப்பதும்

விரும்பும் சரியை முதல் மெஞ்ஞானம் நான்கும்
அரும்பு மலர் காம்கனி போலன்றே பராபரமே

தாயுமானவர் பராபரக்கண்ணி..

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் இந்த நான் கும் உபாயச் சரியை, உபாயக் கிரியை, உபாய யோகம், உபாய ஞானமெனவும், உண்மைச் சரியை, உண்மைக் கிரியை, உண்மை யோகம், உண்மை ஞானம் எனவும் இரு வகைப்படும் புகழ் முதலியனவாய உலகட் பயன்களைக் குறித் துச் செய்யும் சிவபுண்ணியங்கள் உபாயச் சரியை முதலியன வாகும். பக்தி காரணமாகச் செய்யும் சிவபுண்ணியங்கள்

உண்மைச் சரியை முதலியனவாகும். இங்கே நான் குறிப்பிட்டுக் கூறுவன உண்மைச் சரியை, கிரியை யோகங்களைப் பற்றியேயாகும். இவை சிவசரியை, சிவகிரியை சிவயோகம் சிவஞானம் எனவும் பெயர் பெறும்.

சிவசரியையாவது ஆன்மாக்கள் தம்மைப் புறத்திலும் அகத்திலுமியன்றளவு சுத்தமுடையராகச் செய்து அதிசுத்தராகிய சிவபெருமானின் புறத்தொழில்களைச் செய்தலாகும்.

நிலைபெறுமா றெண்ணுதியே நெஞ்சே நீவா
நித்தலு மெம்பிரானுடைய கோயில்புக்கு
புலர் வதன்முன் அலகிட்டு மெழுக்குமிட்டு
பூமாலைபுனைந் தேத்திப்பு கழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்தும் ஆடிச்
சங்கரா சயபோற்றி போற்றி என்றும்
அலைபுனல் சேர்செஞ்சடை எம்ஆதி என்றும்
ஆரூராஎன் றென்றே அலறு நில்லே

என்னுந் திருநாவுக்கரசர் திருவாரூர்த் தேவாரத்திலும்,

பெரும் புலர்காலை மூழ்கிப் பித்தர்க்குப் பத்தராகி
அரும்பொடு மலர்கள் கொண்டாங்
கார்வத்தை யுள்ளேவைத்து
விரும்புநல் விளக்குத்தூபம் விதியினு லிடவல்லார்க்குக்
கரும்பினிற் கட்டி போல்வார் கடவூர் விரட்ட ஞரே

என்னும் திருக்கடவூர்த் தேவாரத்திலுங் குறிப்பிட்டிருப்பவை சரியைப் புறத்தொழில்களாகும். இந்தச் சரியை சரியையிற் சரியை சரியையிற் கிரியை சரியையில் யோகம் சரியையில் ஞானம் எனவும் நான்குவகைப்படும். திருக்கோயில் அலகிடுதல் முதலாயின சரியையிற் சரியை, உமா மகேஸ்வரர் முதலியோரைப் பூசித்தல் சரியையிற் கிரியை, ருத்திரக் கடவுளை மனத்திற் தியானித்தல் சரியையில் யோகம் இவ்விதமான தியான பாவனையில் நிகழும் அனுபவம் சரியையில் ஞானம்.

கிரியையாவது ஆன்மாக்கள் தம்மைச் சுத்தமுடையவர் களாகச் செய்து, சிவபெருமானை லிங்கம் அக்கினி விக்கிரகம் யந்திரம் கும்பம் முதலியவைகளில் மந்திரக் கிரியாபாவனைக ளால் வணங்கல். வணங்குதலாவது சிவபெருமான் மிக உயர்ச்சி உடையவரென்றும் ஆன்மாக்கள் பாசங்களாற் பிடிக்கப்பட்டமையின் மிகத் தாழ்ந்தவர்களென்றுமுணர்ந்து அவ்வான்மாக்கள் தங்களுடைய பாசங்களைக் கழைந்து சிவ பிரானினருளாலேயே சிவபெருமானைச் சமீபித்துக் கலக்கின் றதாகப் பாவித்து இப்பாவனையை உணர்த்தும் மந்திரங்களை உச்சரித்துக் கிரியைகளைச் செய்தலும் இப்பாவனையோடு தியானம் முதலிய மனக்கிரியைகளைச் செய்தலுமாகும்.

கந்தவர்க்கமும் கிளர்மணப்பு கையும்
கவின்கொள் தீபமும் புனிதம ஞ்சனமும்
கொந்தவிழ்ந்த நன்மலரும் மற்றுள்ளவும்
கொண்டு மாயையின் குணத் திலொன்றிலராய்
ஐந்து சுத்திசெப் தகம்புற மிறைஞ்சி
அங்கியின் கடன் கழித்து அருள் வழிநின்று
றிந்தநற் பெருங் கிரியை அன்புடனே
இயற்றவல்லவர் எம்மருங் கிருப்பார்

என்பது திருவாதவூரர் புராணச் செய்யுள்.

புத்திர மார்க்கம் புகலிற் புதிபவிரைப்போது
புகைபொளிம ருசனம முது முதற்கொண்டைந்து
சுத்திசெப் தாசன மூர்த்தி மூந்தத்திமாருஞ்
சோதியையும் பாவித் தாவாகித்துச் சுத்த
பத்தியி ரருச்தித்துப் பரவிப் போற்றிப்
பரிவிநைரு மெரியில்வரு காரியமும்பண்ணி
நித்தமுமிக் கிரியைதனை யியற்றுவோர்கள்
நின்மலன்தன் னருகிருப்பர் நினையுங்காலே

என்பது சிவஞான சித்தியார்ச் செய்யுள்.

ஐந்து சுத்திகளாவன: ஆன்ம சுத்தி, தான சுத்தி, திரவிய சுத்தி, மந்திர சுத்தி, இலிங்க சுத்தி என்பனவாகும் எனச்

சிவார்சனு சந்திரிகையிற் குறிப்பிட்டிருக்கின்றன. சைவ சமய நெறியுரையாளர் ஆன்ம சுத்திக்குப் பதிலாகப் பூத சுத்தியையே முதலில் கூறியுள்ளனர். எவ்வாருயினும் பூத சுத்தி ஆன்ம சுத்தியினுளடங்குமாதலால் ஆன்மசுத்தியையே யான் குறிப்பிடுகின்றனன்.

யோகமாவது ஐம்பொறிகளேயு மொடுக்கிச் சுவாசத்தை நிலேயில் நிறுத்தி மனத்தை ஒருவழிப்படுத்தி உடம்பிலுள்ள மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனுகதம், விசுத்தி, ஆக்ஞே என்னும் ஆருதாரங்களேயுமடைந்து அவ் வவ்விடங்களிலே அவ்வத் தேவதைகளேத் தியானித்து இவ் வாருதாரத்தின் மேலும் ஆன்மாச் சென்று பிரமரந்திரத்தை அடைந்து அங்கே ஒழுகுகின்ற அமிர்த தாரையால் உடம்பு நிலேத்திருக்கத் தான் பூரணப் பிரகாசமாகிய சோதியைக் கண்டு ஆனந்தித்து இருத்தலாகும்.

இந்த யோக வழியைக் கடைப்பிடித்து ஒழுகும் முறையாவது, குருவின் உபதேசத்தைச் சிரவணஞ் செய்தல். இந்தச் சிரவணம் அநேக வாக்கியங்களே முறைமுறையாக அடக்கியுள்ளதாகையால் சிறிது காலஞ்சென்றே சித்தியடையும். சிரவணம் என்பது கேட்டல். இந்தச் சிரவண சித்தி ஓர் அளவில் வரவே, மனனம் நிகழும். மனனம் என்பது சிந்தித்தல். மனனம் நிகழவே தியானமுண்டாகும். தியானமாவது மனத்தாற் சிந்தித்த ஒரு பொருளேப் பற்றிய ஆன்ம அறிவின் தோற்றமாகும். இவ்விதமான தியானம் அறியப்படும் பொருள், அறியும் பொருள் என்னும் இரண்டின் சேர்க்கையுடன் கூடி இருத்தலால் யோகம் எனப் பெயர்பெறும்.

இவை ஆப்தர்களிடமிருந்து கேட்கத்தக்கன. பின்னர்ப் புத்திமான்களாற் சிந்தனே செய்யத்தக்கன. சத்தினி பாதத்தினுற் பரம்பொருளே நாடும் மனமுடையவர்களால் யோகத்தின் வழியாகத் தெரியத்தகுந்தன என சிறீகண்டாசாரியர் தாமியற்றிய இரத்தினத் திரயத்திரயம் என்னும் வடமொழி நூலில் ஒன்பதாம் சுலோகத்திற் கூறியுள்ளனர்.

இந்த யோகம் சகள, நிஷ்களங்களைப் பற்றி நின்று செய்யும், சாலம்ப யோகமும் நிஷ்களத்தைப் பற்றி நின்றுசெய்யும் நிராலம்ப யோகமுமென இருவகைப்படும். மேலும் பற்பலவாக விரிந்து பலவகைப்படும். தற்காலத்திற் சில போலி வேடதாரிகள் தாம்தாம் யோகாப்பியாசம் பழக்குகின்றேமெனப் பறையறைந்து கொண்டாடல் சரீராப்பியாசப் பயிற்சிகளேயன்றி, உண்மைச் சிவயோகமல்ல. இஃது பாமர ஜனங்களை ஏமாற்றுமோர் செப்படி வித்தையேயாகும். இயலுமேயாயின் இவர்கள் யோகாப்பியாசத்தில் முதற்படியாய சித்து விளையாட்டில் இறங்கி சில அற்புதச் செயல்களையாவது பகிரங்கமாகச் செய்து காட்டுவார்களாகுக. அற்றேல் தங்கள் ஏமாற்றுக் கொள்கைகளை விட்டொழிவார்களாக.

ஆலம்பம் என்பது ஆதாரம் என்னும் பொருளுடையது. ஆகவே சாலம்பயோகமென்பது, ஆதாரயோகமெனவும், நிராலம்ப யோகமென்பது நிராதாரயோகமெனவும் பெயர் பெற்றன.

ஆதாரத்தாலே நிராதாரத் தேசென்று
மீதானத்தே செல்கவுந் தீபற
விமலற் கிடமதென்றுந் தீபற,

என்பது ஆதிஉய்யவந்ததேவனுர் இயற்றிய திருவுந்தியார்ச் செயுள்.

ஆதாரயோக நிராதார யோகமென
மீதானத் தெய்தும் விதியிரண்டே — யாதாரத்
தாக்கும் பொருளாலே யாக்கும் பொருளாமொன்
றுக்காப் பொருளேபொன்றும்

என்பது திருக்கடவூர் உய்யவந்த தேவனுர் இயற்றியருளிய திருக்களிற்றுப்படியார்ச் செய்யுள்.

ஆதார யோகத்தின் முடிந்த யோகமே நிராதார யோகமாகும். இது மந்திர யோகமெனவும் பெயர் பெறும்.

அஞ்சே யஞ்சாக அறிவே அறிவாக
துஞ்சாதுணர்ந் திருந்துந் திபற
துய்யபொருளி தென்றுந் திபற,

என்பது திருவுந்தியார்ச் செய்யுள்.

அஞ்செ ழுத்துமே யம்மை அப்பர் தமைக்காட்டுதலா
லஞ்செழுத்தை யாருகப் பெற்றறிந்—தைந் தெழுத்தை
யோதப்புக் குள்ள மதியுங் கெடினுமை கோன்
கேதமற வந்தளிக் குங்கேள்

என்பது திருக்கழிற்றுப்படியார்ச் செய்யுள்.

அகர உகர மகரவிந்து நாதமென்கின்ற பஞ்சாக்ஷர பிரணவத்திற்குப் பிரமா விஷ்ணு உருத்திர மஹேஸ்வர சதாசிவர்களனைவரும் அதிதேவதைகளுமாய் மந்திரமூர்த்திகளுமாய் ஓங்காரமாய் நின்று நடத்துவர். இஃதே சிவபிரானுரின் திருவுருவம். இந்த ஐந்தெழுத்துக்களில் மூலாதாரத்தில் அகாரமும் பிரமாவும், நாபிக் கமலத்தில் உகாரமும் விஷ்ணுவும், இருதய கமலத்தில் மகாரமும் உருத்திரனும், கண்டத்தில் விந்துவும் மஹேஸ்வரனும், புருவ மத்தியிலே நாதமும், சதாசிவமும், சுழுமுனை வழியாக நிற்கின்ற முறையாகும்.

சுவாசத்தை நிலையில் நிறுத்தலாவது, சுவாசத்தை உள்ளே வாங்குவதாகிய உச்சுவாசம் அல்லது பூரகம் என்பதும், உள்ளே வாங்கிய சுவாசத்தை வெளியே விடுதலாகிய நிச்சுவாசம் அல்லது இரேசகம் என்பதும் உட்கொள்ளுதலையும், கழிதலையு மொழித்துள்ளேயுள்ள வாயுவைத் தடுத்து நிறுத்தலாகிய கும்பகம் என்பதும், பிராணவாயுவை வாங்கி விடுத்து நிறுத்தலாகிய பிராணுயாமம் என்பதுமாகும்.

மூலாதாரம் குதத்திற்கும் குறிக்குமிடையேயுள்ளது. முக்கோண வடிவுடையதாகப் பாவிக்கப்படும். இதற்கதி தேவதை விநாயகர். சுவாதிட்டானமென்பது மூலாதாரத்

திற்கு மேலே இரு விரற் பரிமாணத்திலே இலிங்கபீடமாயி ருப்பது நாற்கோண வடிவுடையதாகப் பாவிக்கப்படும். இதற் கதிதேவதைபிரமா. மணிபூரகமென்பது சுவாதிட்டானத்தின் மேல் நாபித் தானத்திலிருப்பது. மூன்று வட்டவடிவுடைய தாகப் பாவிக்கப்படும். இதற்கதி தேவதை விஷ்ணு. அநாகத மென்பது மணி பூரகத்திற்குப் பத்து விரற் பிரமாணத்துக்கு மேலே இருதயகமலத்திலிருப்பது. முக்கோண வடிவுடைய தாகப் பாவிக்கப்படும். இதற்கதிதேவதை உருத்திரன். விசுத்தி யென்பது கண்டத்திலிருப்பது. அறுகோண வடிவு டையதாகப் பாவிக்கப்படும். இதற்கதி தேவதை மஹேஸ்வ ரன். ஆச்ஞை யென்பது புருவ மத்தியிலிருப்பது வட்டவடிவ முடையதாகப் பாவிக்கப்படும்; இதற்கதிதேவதை சதாசிவர்..

அஷ்டாங்க யோகமாவது எட்டுறுப்புகளையுடைய யோக மாகும். அவையாவவ:கொல்லாமை, கள்ளாமை, வாய்மை, பொது மகளிர் பிறர் மனைவியரை விரும்பாமை, இரக்க முடைமை, வஞ்சனையில்லாமை, பொறையுடைமை, மனங் கலங்காமை, சுசியுடைமை, அற்பாகாரமென்னும் பத்து வித மான இயமமும், தவம், சந்தோஷம், தேவ பக்தி, தானம் ஈஸ்வர பூசை, ஞான சாத்திரங் கேட்டல், லஜ்ஜை, புத்தி,. செபம், விரமென்னும் பத்துவிதமான நியமமும், சுவத்தியம், கோமுகம், பதுமம், விரம, கேசரி, பத்திரம், முத்தம், மயூ ரம், சுகம் முதலாய ஆசனமும், பிராணயாமமும், ஐம் பொறிகளையடக்குதலாகிய பிரத்தியாகாரமும், தாரணையும்,. தியானமும், சமாதியுமாகும்.

தேடுவன் றேடுவன் செம்மலர்ப் பாதங்க ளைடொறும்
நாடுவ னாடுவ நாபிக்கு மேலேயோர் நால்விரல்
மாடுவன் மாடுவன் வன்கைபிடித்து மகிழ்ந்துளே
ஆடுவ னாடுவ னைமாத்தூரெம் மடிகளே,

எனவும்,.

வழித்தலைப் படுவான் முயல்கின்றேனுன்னைப்
போலென்னைப் பாவிக்கமாட்டேன்
சுழித்தலைப் பட்ட நீரதுபோலச் சுழல்கின்றேன்
சுழல்கின்றதெள் ளுள்ளம்

கழித்தலைப் பட்டநாயதுபோல ஒருவன்கோல் பற்றிக்
கறகற விழுக்கை
ஒழிந்து நியருளாயின செய்யா யொற்றியூரெனு
மூருறைவானே

எனவுங் கூறப்பட்டிருக்குஞ் சுந்தரமூர்த்தி நாயனுர் தேவாரங்களானுமிதனுண்மையைத் தெளிக, இந்தச் சிவயோகமானது யோகத்திற் சரியை, யோகத்திற் கிரியை, யோகத்தில் யோகம், யோகத்தில் ஞானமென நான்குவகைப்படும். இயமம், நியமம், ஆசனம், பிராணுயாமமென்பன யோகத்திற் சரியை, பிரத்தியாகாரமும் தாரணையும் யோகத்திற் கிரியை, தியானம் யோகத்தில் யோகம், சமாதி யோகத்தில் ஞானம்.

சிவஞானமாவது, பதி பசு பாசங்களின் சுவரூபங்களை ஞானநூற்களைக் கற்றலினுலும், குருவாயிலாகக் கேட்டலினுலும், சாதுசங்க நாட்டத்தினுலும், குருவருளாற் பெற்ற யோக நெறியானுமுள்ளபடி யுணர்ந்து, பாசநீக்க விருப்புற்றுக் சச்சிதானந்த ரூபராய நிட்களாதீத பரமசிவனை அறிவுத் தொழிலான் வணங்கலாகும் எனவே காண்பானுகிய ஆன்மா காட்சியாகிய அறிவு, காட்சிப் பொருளாகிய சிவமென்னும் மூன்றும் வேறுபடுதலின்றி யொன்ருயிரண்டாயொன்றிரண்டுமின்ருய் நிற்குமத்துவித நிலையிற் சிவத்துடன் கலந்திருத்தலே இச்சிவஞான முடிவாகும்.

சன்மார்க்கஞ் சகலகலை புராணவேத
சாத்திரங்கள் சமயங்கள் தாம்பலவு முணர்ந்து
பன்மார்க் கப்பொருள் பலவுங்கிழாக மேலாம்
பதிபசு பாசந்தெரிந்துப் பரசிவனைக் காட்டு
நன்மார்க்க ஞானத்தை நாடி ஞான
ஞேயமொடு ஞாதிருவு நாடாவண்ணம்
பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றி ஞானப்
பெருமை புடையோர் சிவனைப் பெறுவர் காணே

என்னுஞ் சிவஞான சித்தியார்த் திருவிருத்தச் செய்யுளாலும்

நான்தனக் கன்பின்மை நானுந் தானும் மறிவோம்
தானென்ஜீன யாட்கொண்ட தெல்லாருந் தாமறிவார்
ஆனகருணையு மங்குற்றே தானவனே
கோனென்ஜீனக்கூடக் குளிர்ந்தூதாய் கோத்தும்பி

எனவும் மாணிக்கவாசக சுவாமிகளருளிய திருவாசகச் செய்யுட்களினுலுமிவற்றைத் தெளிக.

முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேஜீனப்
பத்திநெறி யறிவித்துப் பழவிஜீனகள் பாறும்வண்ணம்
சித்தமல மறுவித்துச் சிவமாக்கி எஜீனஆண்ட
அத்தனெனக் கருளியவாருர் பெறுவார் அச்சோவே

என்பது மாணிக்கவாசகர் திருவாசகம்.

புணர்ப்பதொக்கவெந்தை என்ஜீன ஆண்டுபூண நோக்கினுய்
புணர்ப்பதன்றிதென்றபோது நின்னெடென்
ஞேடென்னிதாம்
புணர்ப்பதாக வன்றிதாக அன்புநின் கழற்கணே
புணர்ப்பதாக வங்கனுன புங்கமான போதமே.

இந்த ஞானமானது, ஞானத்திற் சரியை, ஞானத்திற் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என நான்கு வகைப்படும். கேட்டல் ஞானத்திற் சரியை, சிந்தித்தல் ஞானத்திற் கிரியை, தெளிதல் ஞானத்தில் யோகம், நிட்டைகூடல் ஞானத்தில் ஞானம்.

இந்தச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் இந் நான்கு வகையாலும் இறை வழிபாடு செய்தற்கு உகந்த ஸ்தானங்கள் திருக்கோயில்களும், திருமடங்களுமேயாகும். ஆதலால் இவைகளெல்லாம் தகுந்த முறையிலும் மிகப் புனிதமாகவும் பாதுகாக்கப்படல் வேண்டும். தென்னிந்தியாவிலேயுள்ள திருப்பனந்தாள், தருமை, திருவாவடுதுறை என்னும் ஆதீன மடங்களில் ஞானநெறிப் போதஜீனகளும், சாதஜீனகளும் பண்டைக்காலந் தொட்டே மிகு மும்முரமாக

நடந்துவருகின்றன. இது தமிழகத்தார் பெற்ற பெருந்தவப் பயனேயாகும் என்பதற்குச் சற்றேனும் சந்தேகமின்றே யாகும்.

## IX பிரதம மகாசங்கார நிருத்தம்

இஃதாவது அநாதிமுத்த பரமபதியாகிய சிவபிரானுன வர் பிரதம மஹாசிருஷ்டி காலத்திலே சுத்த மாயையிலிருந்து சுத்த தத்துவமைந்து, சுத்த புவனம், சுத்த போக்கியப், பொருள், நாதரூப பரதேகங்கள், வேதாகமங்களென்பனவற் றையும், சுத்தாத்துவவாசிகளான அணுசதாசிவர், வித்தி யேசர், மந்திரர் முதலியவர்களையும் படைத்தனர்.

இந்த வித்தியேசருடலைவரான அனந்தேஸ்வரர் மஹா சிருஷ்டியை யாரம்பித்து கலாதிபிருதுவி முடிவான முப்பது தத்துவங்களையும், சுத்த அசுத்தாத்துவவாசிகளான, ஸ்ரீகண் டர் முதலியோரையும் படைத்து வரையறை செய்யப்பட்ட காலங்காத்து இடையிற் சிலவற்றையும் மஹாசங்கார காலத் தில் முழுவதையுஞ் சங்கரிப்பர். எனவே மஹாசிருஷ்டி மஹா சங்காரத் தலைவர் அனந்தேஸ்வரராகும்.

இந்தக் குணநிலயச் ஸ்ரீகண்டருத்திரன் மத்தியசிருஷ் டியை யாரம்பித்து பிரகிருதியிலிருந்து குண தத்துவ முதல் பிருதுவிதத்துவமிறுதியாகவுள்ள இருபத்து நான்கு தத்து வங்களையும், தூலதேகங்களையும் அசுத்தாத்துவவாசிகளான பிரமா விட்டுணு முதலியோரையும் படைத்துக் காத்து மத் திய சங்கார காலத்தில் அழிப்பர். எனவே மத்திய சிருஷ்டி சங்காரத் தலைவர் ஸ்ரீகண்டருத்திரராகும்.

இந்தக் குணநிலயப் பிரம விட்டுணுக்களும் பிரமாண்ட நிலயப் பிரம விட்டுணுக்களும் அதமசிருஷ்டியை யாரம்பித் துக் குண முதலாகப் பிருதுவியீறாகவுள்ள புவனங்களிற்போக் கியப் பொருட்களையும், தூல தேகங்களையும், தேவர் முதலி யோரையும், பிரசேசர், சோமர், கந்தருவர், இயக்ஷர், ராக்ஷ தர், பிசாசர், மானுடர், தாவரம், ஊர்வன, பசு, பக்ஷி, மிரு

கங்கள், நக்ஷத்திரம், கிரகம், தூமகேது, மேகம், மலை, கடல், ஆறு என்பனவற்றையும் படைத்துக் காக்கின்றனர். ஸ்ரீகண்டராலேவப்படுகின்ற காலாக்கினி ருத்திரன் அதம சங்கார காலத்திலும், இடையிட்டுத் தானாகவும் இயமன் முதலியோராலும் அழிப்பர். எனவே அதம சிருஷ்டித் தலைவர் பிரமா, காத்தற் தலைவர் விஷ்ணு, சங்கார கர்த்தா காலாக்கினி ருத்திரரும் இயமனுமாகும்.

பிரமாவும், விராட்டும், பிரசேசரும், பிறரும் நித்திய சிருஷ்டியை யாரம்பித்துப் பிரமாண்டத்துள் படைக்கின்றனர். விஷ்ணு காக்கின்றனர். காலாக்கினி ருத்திரன் தானாகவும் இயமன் முதலியோராலுஞ் சங்கரிக்கின்றனர்.

இங்ஙனே கூறப்பட்ட ஐவகைச் சிருட்டிகளுள் பிரதம மஹா சிருஷ்டியே முதன்மையுடையது.ஆகவே பிரதம மஹா சங்காரமே யிறுதிக் கண்ணதாகும். இந்த முடிவு காலத்திலே பன்னிரண்டு சூரியர்களுமுதித்து, நூறு வருடகாலம் மழையில்லாமற் பூமியெல்லாவற்றையுமெரித்து நீருக்கி, ஆதிசேஷனையுமெரித்து நீருக்கும்பொழுது அதன் பட முடிகளினின்றும் விஷாக்கினி பிறந்து, சூரியாக்கினியோடு சேர்ந்து, அவ்வாதிசேஷனையும், பன்னிரண்டு சூரியர்களையுமெரித்து நீருக்க, அந்த அக்கினியிலிருந் தேழு மகா மேகங்கள் பிறந்து, நூறு வருடம் பெருமழை பெய்யும். அதனாலுண்டான ஜலமே எவ்விடமும் பெருகி நிற்கும். அந்த நீரே, பூமியைத் தன்னிடத்தே யொடுக்கி யடக்கி நிற்கும் பிரளயமாகும். இதனை வடவாமுகாக்கினி யென்னு மூழித் தீ குடித்தெழுந்து ஊழிக் காற்றிலொடுங்கும். அக்காற்றானது ஆகாயத்திலொடுங்கும். அவ்வாகாயம் அகங்கார தத்துவத்திலும், அது மகானிடத்திலும், அது பிரகிருதி மாயையிலும், அப்பிரகிருதி மாயை அசுத்த மாயையிலும், அவ்வசுத்த மாயை சுத்த மாயையிலும், அது பராசத்தியிலும், பராசத்தி சிவத்திலுமொடுங்கும். அக்காலத்தச் சிவபிரானொருவரே தனித்துநின்று விளங்கித் திருநடனஞ் செய்வர். ''தோடுடைய செவியன்'' என்னுந் தேவாரத்தில், ''காடுடைய சுடலைப் பொடிபூசி'' எனத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரவர்கள் திருவாய்

மலர்ந்தருளியதும் இப்பிரதம மஹா சங்கார காலத்துண் டாய உண்டாகின்ற சுடலையையேயாகும்.

மாநிலம் புனலி லொழிக்குப் அப்புனல்போய்
வன்னியிற் கரக்கு மவ்வன்னி
யூனமில் வளியிற் சேரு மவ்வளிபோ
யுயர்விசும் படையுமவ் விசும்பாங்
கேனைய வாங்கா ரத்திடை யொழிக்கு
மாங்கது மகானிடை யெய்து
மானவம் மகான்போ யுயர் பிரகிருதி
தன்னிடை யினிதினி யமரும்

என்னுங் கூர்ம புராணச் செய்யுளினாலும்,

''தத்துவ மெண்மூன்றுஞ் சென்றான் மதத்து
வத்தொடுங்கும்
வித்தையி லொடுங் குமாறும் சிவத்தினி
லொடுங்கு மூன்று
நித்ததத்துவ மிம்மூன்று மென்பர் களிரண்டு நின்ற
சத்தமாஞ் சிவத்தொடுங்குந் தோற்றமு மிதுபோலாகும்

என்னுஞ் சிவஞான சித்தியார்ச் செய்யுளினாலும்,

கடல்விட நுகர்ந்த தொல்லைக் கடவுள் பின்னழிக்குங்காலை
யுடலுயி ரகலம்யாவு மொடுங்கிய விடமதன்றோ
சுடலையதாகு மந்தச் சுடலைகாணனைய சோதி
நடனவில் இன்ற வெல்லை நாடருந் தகைமைத்தன்றே,

என்னுங் கந்தபுராணச் செய்யுளினாலும் பிறவற்றானுமித னுண்மை காண்க.

இனி, இவ்வகைத்தான நடனக் காட்சிகளின்றுமவ்வத் திருத்தலங்களிற் காட்டப்படுகின்றன. இதனுண்மை யென் னையோவெனில் புளியைக் கண்டவர்கட்கு வாயில் நீரூறுதல் போல வித்திருநடனக் காட்சியைத் தரிசிப்பவர்கட்குக் கண்

களில் நின்று மானந்த நீர் சொரியும், மயிர் சிலிர்க்கும், மன விருளோடும் ஆனந்தவமுதசூறும், இவை பொருந்தப் பெற் ரேர் சுத்தாவத்தையை யடைந்து, புறநிலே அகநிலே என்னுங் கருவிகளோடு கூடித் தம்மைக் காண்பதாகிய நின்மல சாக்கி ரத்தையும், அகநிலேக் கருவிகள் மாத்திரத்தாலே கூடி நின்று தம்மைக் காண்பதாகிய நின்மல சொப்பனத்தையும், இவ் விருவகைக் கருவிகளேயும் நீக்கி மனத்திற்குஞ் சொல்லிற்கு மெட்டாத தம்மையறிதலாகிய நின்மல துரியத்தையும் நீக் கிச் சிவஞானிகளாவர்,

புளிக் கண்டவர்க்குப் புனலூறுமாபோற்
களிக்குந் திருக்கூத்துக் கண்டவர்க்கெல்லாந்
துளிக்குங் கண்ணிருடன் சோரு நெஞ்சத்திரு
ளொழிக்குமானந்த வமுதூறு முள்ளத்தே

என்னுந் திருமூலநாயஞரருளிய திருமந்திரச் செய்யுளும்,

சோறிடுநாடு துணிதருங் குப்பை தொண்டன்பரைக் கண்
டேறிடுங்கைக ளிறங்கிடுந் தீவினை யெப்பொழுதும்
நீறிடுமேனியர் சிற்றம்பலவர் நிருத்தங் கண்டா
லூறிடுங்கண்க ளுருகிடு நெஞ்ச மென்னுள்ளமுமே,

என்னும் பட்டினத்தடிகள் செய்யுளும்,

ஆனந்த நிர்த்த சமயே நடநாயகஸ்ய
பாதாரவிந்த மணிநூபுர சிஞ்ஜிதானி
ஆனந்தயந்தி மதயந்தி விமோஹயந்தி
ரோமாஞ்சயந்தி நயநாநி கிருதார்தயந்தி

என்னும் வடமொழித் தோத்திரச் சுலோகமும் இதனை இனிதே விளக்குதல் காண்க. சிவபிராஞனவரிச் சிவஞானிக ளது இருதயத்தையே சிதம்பர சிற்சபையாகவும், ஆகாசமே அங்கமாகவும், சுழலுங் காற்றே பெருமூச்சாகவும், பூமியே திருப்பாதங்களாகவுங்கொண்டு வேதம் முழங்கப் பத்து வித நாதங்களும் வாத்தியங்களாக ஒலிக்க நடனஞ் செய்வர்.

அந்நடனத்தை அந்த ஞானிகள் ஞானக் கண்களினுலே உள்ளபடி தரிசித்து அத்துவிதமுற்றிறுமாந்திருப்பர். ஆகவே அகமாகிய ஆன்மப்பிரகாசமே ஞானபை. அப்பிரகாசத்துள்ளிருக்குஞ் சோதியே சிவம், அவ்வொளியினசைவே திருநடனமென்பதாகும்.

விளங்க வெண்ணிறுபூசி விரிசடைக் கங்கைதாங்கி
துளங்கு நன்னுதற்கட்தோன்ற சுழல்வளி நெடுமூச்சாக
களங்கமிலுருவந் தானே ககனமாய்ப் பொலியப்பூமி
வளர்ந்த தாளென்ன வுள்ளமன்றென மறையொன்றின்றி
மறைமுழக் கொலிப்பத்தானே வரதமோடபயக் கைகள்
முறைமையி நோக்க நாதமுரசெனக் கறங்கவெங்கும்
குறைவிலாவண நிறைந்து கோதிலா நடனஞ்செய்வான்

என்னுந் தாயுமானவர் சுவாமிகள் பாடலும்,

மோனந்தமா முனிவர் மும்மலத்தை மோசித்து
தானந்த மானிடத்தே தங்கியிடு—மானந்த
மொண்டருந்தி நின்ருடல் காணுமருண் மூர்த்தியாய்க்
கொண்டதிரு வம்பலத்தான் கூத்து

என்னுஞ் செய்யுளுங் கண்டுண்மையுணர்க.

சிவபெருமானுனவர் திருப்பெருந்துறையில் குருந்த மர நிழலில் திருவாதவூரரெனும் மாணிக்கவாசகப் பெருந்தகையார்க்குபதேசஞ் செய்தருளியபொழுது கூறியதாகத் திருவாதவூர்ப் புராணத்திற் சொல்லப்பட்டிருக்கும்

“முக்குணம் புலனைந்துடனடக்கி மூலவாயுவை
யெழுப்பியிரு வழியைச்
சிக்கெனும் படியடைத் தொருவழி திறந்து
தாண்டவச் சிலம்பொலியுடன் போய்த்
தக்கவஞ்செழுத் தோரெழுத்துருவாந் தன்மைகண்
டருடரும் பெருவெளிக்கே
புக்கழுகந்தின ரெமதுருப்பெறுவர் புலியின்வேட்டுவ
னெடுத்தமென் புழுப்போல்”

என்னுஞ் செய்யுளிலும், ஞானக் கண்களாற் றுண்டவ தரிச னஞ் செய்தல் காட்டப்பட்டிருத்தல் காண்க.

திருச் சிலம்போசை யொலிவழியே சென்று
நிருத்தனைக் கும்பிட் டென்னுந் தெபற
நேர்படவங்கே நின்றுந் தெபற,

என்னும் உய்யவந்த தேவநாயனுராலியற்றியருளிய திருஉந் தியார்ச் செய்யுளிற் சிவயோகிகள் ஞானிகள் திருச்சிலம் பொலி கேட்டல் கூறப்பட்டிருத்தல் காண்க.

இங்ஙனே சிவயோகிகளும், சிவஞானிகளுந் தம்முள் ளேயே நடன தரிசனஞ் செய்யும் பெரும்பாக்கியம் பெற்று விட்டார்களேயெனிலதன் பின்னருஞ் சிதம்பரத்திற்கும் மற் றைய ஸ்தலங்கட்குஞ் சென்றுசென்று தரிசனஞ் செய்ய வேண்டிய தேவையில்லையேயெனில், திருப்பெண்ணுகடத் திலேயிருந்த, அச்சுதனுரென்னுஞ் சைவ வேளாளர் சுவேத வனமென்னுந் திருவெண் காட்டிற் கோயில் கொண்டெழுந் தருளியிருக்கும் சுவேதாரணியேசுரரையும், பிரம்ம வித்தியா நாயகியம்மையாரையும் வழிபட்டுப் புத்திரச் செல்வம் வேண்ட, ஆங்குள்ள முக்குளத் தீர்த்தக் கரையிற் சிவபிராணு ரருளாற் றேரற்றியந்த அச்சுதனுர் புதல்வனுக வளர்ந்து, திரு வெண்ணெய் நல்லூரில் வந்திருந்து, பரஞ்சோதி மஹாமுனிவ ராலனுக்கிரகஞ் செய்யப்பட்டு வடமொழிச் சிவஞான போதத்தைத் தமிழ் மொழியிலியற்றியருளிய திருக்கயிலாய பரம்பரைப் புறச்சந்தான முதற் குரவராகிய சுவேதவனப் பெருமாளென்னும் மெய்கண்டதேவர், அச்சிவஞான போத நூலின் முதலிலேயே,

கல்லாநிழன் மலைவில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர் நல்லார் புனைவரே

என எடுத்தோதிய காப்புச் செய்யுட் குரை கூறப் புகுந்த சிவ ஞான முனிவர், ''காமிக முதலிய சைவாகமங்களுள் ஞான பாதத்தினுளதாகிய வாசங்கை நீக்கி, அவற்றின் பொரு

ளுண்மை பொதுவியல்பு சிறப்பியல்பென்று இரு வேறுவகைப் படுத்துக் காட்டிப் போதித்தற்கு இரௌரவாக மத்தினெ ழுந்த சிவஞானபோத நூலினைத் தமிழுலகமுய்தற்பொருட்டு மொழி பெயர்த்துச் செய்து பொழிப்புரைப் பாவெடுத்துக் கொண்டவாசிரியர், சாக்கிரத்தே அதீதத்தைப் புரியுந் தமக் கிடையூறு சிறிதுமணுகாமை யறிந்தாராயினும், ஆன்றோரா சாரம் பாதுகாத்தற் பொருட்டும், மாணுக்கர்க்கறிவுறுத்தற் பொருட்டும், முதற்கண்ணிடையூறு நீக்குதற்குரிய விநாயக் கடவுளை வாழ்த்துவதாகிய மங்கல வாழ்த்துக் கூறுகின்ருர்'' எனச் சுட்டிக்காட்டியிருத்தலினுலும், இஃதேபோன்று யோகி கள் ஞானிகளுந் தம்மைப் பார்த்தாவது மற்றையோர் பல ருந் தீர்த்த ஸ்தல யாத்திரை செய்தல் வேண்டுமென்னுமருட் பெருக்காலேயே பற்பல ஸ்தலங்கடோறுஞ் சென்றுசென்று தரிசனஞ் செய்வர். எனினுமவர்கள் தம்முள்ளந்தர்யாமி யாகி நிற்குஞ் சிவபிரானுனவர் அவ்வச் சிவஸ்தலங்களிலுஞ் சிவலிங்கங்களிலுமிருக்கின்றனரெனப் பாவித்தே வணங்கு வர். இதற்கோர் பிரத்தியக்ஷப் பிரமாணமாகத் தமது திரு வுருவப் படத்தையெடுத்தற் கெவ்வித அன்பர்கட்குத் தானு மிடங் கொடாதவராயும் பத்திரிகைகள் புத்தகங்களிற்றமது நாமம் வெளிவருதற்கிடங் கொடாதவராயும் எவ்வகைத் தாய ஆடம்பரங்களுமின்றி,

..................................................................... நித்தனன்புகொண்டு
வேர்த்தாற் குளித்துப் பசித்தாற்புசித்து விழிதுயின்று
பார்த்தாலு லகத்தவர் போன்றிருப்பர் பற்றற்றவரே

என்னும் பட்டினத்தடிகள் செய்யுட்கிலக்காய வருமாய எம் யாழ்ப்பாண யோக குருநாத சுவாமிகள் அடிக்கடி பற்பல தலங்கட்கு யாத்திரை செய்வதுங் காணக்கிடத்தலானும்

புலியுமோராவு நட்பொடுவாவி புகுந்து நீருண்டுடனடந்து
நலிவிலாவகையினேர் பொழிற்சேக்கை நயந்து
வாழ்ந்திருந்தனகண்ட
வலியவரன்று முதலுபசார வகையினினிற்கவே செய்தாய்

என்னுஞ் செய்யுளிற் கூறியபடியே புலியையும், பசுவையும் ஞானப் பார்வையினுலே பகைமை நீக்கிய தெய்வத்தன்மை பொருந்தியவரும், சிவபோகசாரம், முத்தி நிச்சயம், திரி பதார்த்த ரூபாதி தசகாரியவகவல், சோடச கலாப்பிரசாத ஷட்கம், பண்டாரக் கலித்துறை, யென்னும் ஞானப்பிரகாச மாலை, சொக்கநாத வெண்பா, சொக்கநாதக் கலித்துறை யென்னும் ஞான நூல்களை லோகோபகாரமாக வியற்றியரு ளியவருமாகிய குரு ஞான சம்பந்த சுவாமிகள், சிதம்பரத் திற்கு யாத்திரை செய்ததும், ஆங்குள்ள ஆயிரக்கால் மண்ட பத்திலிராப் பகலாக நிஷ்டை கூடியிருந்தமையும், ஐந்தாவது குரவராகிய ஞானசம்பந்த தேசிகரவர்கள் தக்ஷிண தேச ஸ்தலங்களெல்லாஞ் சென்று தரிசனஞ் செய்தமையும், ஆறு வது குருவாகிய திருஞான சம்பந்த தேசிகரவர்கள் திருநெல் வேலி, வேள்விமலை, திருக்குற்றாலம் முதலிய ஸ்தலங்கட்கு யாத்திரை செய்தமையும், எட்டாவது குருவாகிய அழகிய திருச்சிற்றம்பல தேசிகரவர்கள் சோழ பாண்டிய தேச ஸ்த லங்கட்கு யாத்திரை செய்தமையும், ஒன்பதாவது குருவும்,

கானமருங் கிள்ளையொடு குயில் செம்போத்துக்
கட்டரவம் பூனையெலி கதியிற்சேர
ஞானவருட் பார்வைபுரி நாதா போதா
நாடறியேற் குனதருளை நயப்பதென்னுள்
வானமருங் கடம்பவனச் சவுந்த ரேசன்
மலரடியை மலரடியால் வணங்கவெண்ணித்
தானமரும் பூசைபுரி திருநாவுக் கரச
சம்பந்த ஞானகுரு தருமைவாழ்வே,

என்னுஞ் செய்யுளிற் சுட்டிக் காட்டியபடியே பூனை, கிளி, செம்போத்து, பாம்பு, எலி என்பவைகளின் பகைமையை நீக்கி யாட்கொண்டவரும், சித்தாந்த நிச்சயமென்னும் ஞான நூலை யியற்றியவருமாகிய திருநாவுக்கரச தேசிகரவர் கள் சிவஸ்தல யாத்திரை செய்தமையும், பத்தாவது தலைவ ராகவிருந்த குருவும். துங்கனென்னும் மலை நாட்டரசனது

மகளைப் பற்றியிருந்த பிரமராக்ஷதத்தை யவளிடமிருந்து துரத்தினவரும், பின்னர்ச் சின்நாட்களாற் றம்மிடம் வந்து பாதங்களில் வீழ்ந்து வணங்கியிரந்த வந்தப் பிரமராக்ஷதத்திற்குத் தனதொரு காலவனுட்டானத்தைத் தத்தஞ் செய்து கொடுத்து நல்வழியிற் செலுத்திய ஞானவானுமாகிய சிவ ஞான தேசிகரவர்கள், வைத்தீஸ்வரன் கோயில், சிதம்பரம், திருவாரூர், மதுரை, திருச்செந்தூர், காசி முதலிய ஸ்தலங்கட்கெல்லாம் யாத்திரை செய்தமையும், பதினாறாவது குருத் தலைவராகவிருந்தவரும், மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களால், ''சச்சிதானந்த தேசிகர் மாலை'' என்னும் பிரபந்தத்தாற் புகழப்பட்டவருமாகிய, சச்சிதானந்த தேசிகரவர்கள் தக்ஷிண தேச யாத்திரை செய்தமையும், இருபத்து மூன்றாவது குருத்தலைவராக வருளாட்சி செய்தவரும், மதுரைத் தமிழ்ச் சங்கத்திற் கல்வி கற்றவரும், இளமையிலேயே சந்நியாசம் பெற்றவரும், எமது வித்துவ பரம்பரையினராற் பாடிப் புகழ்ந்து துதிக்கப்பட்டவரும், அவர்களுளொருவராகிய சுவாமிநாத பண்டிதரையும், வேறு பல புலவர்களையுங் கொண்டு சைவப் பயிர் வளர எங்கும் பிரசங்கமாரி பொழிவித்தவராயும் விளங்கிய சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரியரவர்கள் சோழ தேச ஸ்தலங்கள் மதுரை, திருப் பரங்குன்றம், திருச்செந்தூராதிய விடங்கட்கெல்லாம் யாத் திரை செய்தமையும், இருபத்துநான்காவது குருத்தலைவராக அருளாட்சி செய்தவரும், ஆதீன மடாலயத்தினொர் பாகத்தைச் சைவாகம பாடசாலையாக்கிக் கிரியை முறைகளைப் பிராமணோத்தமர்கள் செவ்விதே பயிலச் செய்தும், மற்றோர் பாகத்தைத் தேவார பாடசாலையாக்கி யோர் சாராரைப் பண்ணோடே தேவாரம் பயிலச் செய்தும், மற்றோர் பாகத்திலோர் பெரும் புத்தகசாலையை யேற்படுத்தி, விரும்புவோர் சென்றிருந்து நூல்களைக் கற்று அறிவிற் சிறந்து விளங்க வழி காட்டியுமிதோடமையாது ஞானக் கலையிலார்வமுற்றோர்க்கு ஞான நூல்களை யிலவசமாயுதவியும், மற்றோர் பாகத்தை யச்செந்திரசாலையாக்கி ஞானசம்பந்தமென்னுமோர் ஞானப் பத்திரிகையை யதிலிருந்தும் வெளிப்படுத்தி, அஃது பிரதி மாதமும் வேறுவேறு தேசங்களில் வசிக்குமன்பர்களிடமெல்

லாஞ் சென்று ஞானமிர்தத்தைக் கொடுக்கும்படி செய்தும், ''வேண்டுவார் வேண்டுவதே யீவான் கண்டா''யென்னும் வேதாரணியத் தேவாரத்திற் குறிப்பிட்டபடியே, பொருள் வேண்டும் புலவர்கட்கெல்லாம் வேண்டியவேண்டிய பொருட் களையிந்தும், பொருளுமருளும் விழைகுநர்க் கிரண்டினையு மளித்தும், தாம் பரிபூரண நிலையடைந்த பிற்காலத்திலு மிவ் வாதீனத் தலைவர் சைவத்தையும், தமிழையும், தமிழ்ப்புல வர்களையும், ஆதுலர்களையு மாதரித்துக் காப்பாற்றவேண்டு மென்னும் பேரவாக் கொண்டு, ''இருவற் சுட்டிய பல்வேறு தொல்குடி'' என நக்கீர தேவர் திருவாய் மலர்ந்தருளிய திரு முருகாற்றுப் படைச் சுவாமி மலைச் செய்யுளிற் கூறியபடியே நெடுங்காலமாகப் பிரசித்திபெற்று வாழ்ந்த வுயர்ந்த சைவ வேளாளர் குலத்துதித்தவராயுங், கல்வியறிவு, நல்லொழுக் கஞ், சமயாசாரமாதியவற்றிற் சிறந்தவராயும், சொக்கநாத ரையும், நடேசப் பெருமானையுங் குருமூர்த்திகளையு மிடைய ருதே சிந்திக்குமரும் பெருங் குணமுடையராயும், சிதம்ப ரேஸ்வரருடன் பல்லாற்ருனுஞ் சம்பந்தமுடையராயுமிருக் கின்ற கயிலை சுப்பிரமணிய ஞானசம்பந்த பரமாசாரியரவர் கட்குப் பட்டாபிஷேகஞ் செய்து பீடாதிபதியாக்கியும், பற் பலராலும் புகழப்பட்டு வாழ்ந்த சண்முக தேசிக ஞானசம் பந்த பரமாசாரியரவர்கள் பற்பல ஸ்தலங்கட்கும் யாத்திரை செய்தமையுமறியக் கிடப்பதனுலும், சைவ சமயாசாரியர்க ளாகிய திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர், திருநாவுக்கரசு நாயனுர், சுந்தரமூர்த்தி நாயனுர், மாணிக்கவாசக சுவாமிகள், தாயுமானவர், பட்டினத்தடிகள், திருவிசைப்பாப் பாடியரு ளிய திருமாளிகைத் தேவர், சேந்தனுர், கருவூர்த்தேவர், பூந் துருத்தி நம்பிகாடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனுர், புருடோத்தம நம்பி, சேதிராயர், திருப் புகழ் பாடியருளிய அருணகிரிநாதர், கோடி உருத்திரர்கள், நந்திதேவர், பிரமா, விஷ்ணு, காளி, இலக்குமி, சரஸ்வதி, மார்க்கண்டேயர், அகத்தியர், வசிட்டர், கபிலர், தும்புரு நாரதர்கள், இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வரு ணன், வாயு, குபேரன், ஈசானனென்னு மட்ட திக்குப் பால கர்கள் இயக்கர், கின்னரர், கிம்புருடர், கருடர், துவாதசா

தித்தர், சந்திரன், மற்றைய கிரகங்கள், தக்கன், அஷ்டவசுக்கள், அஷ்டநாகங்கள், ஆதிசேஷன், ஏனைய முனிவர்,தேவர், தேவப் பெண்கள், அசுரர்கள், ராக்ஷதர்களாகிய யாவரும் சிவஸ்தல ஆலய தரிசனங்கள் செய்தமையறியப்படுதலினுலும்யோகிகளும், ஞானிகளுஞ் சிவக்ஷேத்திர ஆலய தரிசனஞ் செய்தல் பெறப்படுதல் காண்க.

இவ்வாற்ருனே சிவபெருமானை வணங்குமெண்ணங் கொண்ட பக்குவான்மாக்கள் எவ்வெத்தலங்களை வழிபடல் வேண்டுமென்றுணர்தற் பொருட்டாக ஸ்தலங்களின் மகிமையைப் பற்றி யீண்டுக் குறிப்பிடுகின்றனன்.

இந்தப் பூவுலகத்திலே அனந்த கோடிஸ்தலங்களுண்டு. அவற்றுளாயிரத்தெட்டு ஸ்தலங்களே மேலானவை. அவற்றுள்ளும் நூற்றெட்டு ஸ்தலங்களே மேலாகும். அவற்றுள்ளுமறுபத்தெட்டு ஸ்தலங்களே சிறப்புற்றன. அவற்றுள்ளும் பதினுறு தெய்வ ஸ்தலங்களே விசேஷமுற்றன. அவைகளிலும் முத்திநகர்களெனச் சொல்லப்படும் அயோத்தி, மாயை, மதுரை, அவந்திகை, காசி, காஞ்சி, துவாரகை என்னும் ஏழு ஸ்தலங்களே உயர்ந்தனவாகும். இவைகளிலுமாதார க்ஷேத்திரங்களாகிய, திருவாரூர், திருவானைக்கா திருவண்ணுமலை சிதம்பரம், திருக்காளத்தி, காசி, மதுரை என்பவைகளே விசேஷமுற்றன. இவைகளிலும் பஞ்சபூதஸ்தலங்களாகிய காஞ்சி, திருவானைக்கா, திருவண்ணுமலை, சிதம்பரம், திருக்காளத்தி என்பவைகளே சிறந்தன. இவைகளிலும், திருவாரூர், காசி, சிதம்பரமென்பனவே சிறந்தன. இதனுள்ளும், சிதம்பரமே மிக விசேஷமுற்றதாகும். இது சுழுமுனு நாடி ஸ்தலமுமாகும்.

அவ்வகைய மூன்றின்முதற்றலப் பெருமைதனைச்
சுருக்கி யறையக்கேண்மி
னெவ்வகைய வுலகத்துந் தருமதலமதிகமவற் றிறிலாத
சைவதலமதிக மவற்றறுபத் தெட்டதிக மவைதனிலிரெட்டுத்
தெய்வதலமதிக மவற்றதிகதல நான்கவற்றைச்
செப்பக் கேண்மின்

என்னுந் திருவிளையாடற் புராணச் செய்யுளும்.

மின்னவிரம்பலங்காணக் காசிநகர்வதிந் திறக்க
வியன்காளத்திப்
பொன்னகரம் பத்தியினல் வழிபாடு செயவளிக்கும்
போகம்விடு

என்னும் செய்யுட் பாகமும் இதனை விளக்குதல் காண்க,

இந்தத் திருத்தலங்களிலெல்லாம் அதலம், விதலம், தரா தலம், ரசாதலம், மகாதலம், பாதாழம் என்றும் கீழ் ஏழு லோகங்களிலுஞ் செறிந்து கீழிருந்து முளைத்தெழுந்தனவாகிய சிவலிங்கங்களுடன் பொன்னினுலும் செம்பினுலும் மரகதம் முதலாய விலையுயர்ந்த அரதனங்களினுலுஞ் செய்யப் பெற்ற திருவுருவங்கள் விளங்குகின்றன.

இஃதேயல்லாமற் சிற்சில இடங்களிற் சிவபிரானுனவர் சிற்சில காலங்களிலன்பர்கள் சிலர்க்குத் தரிசனங் கொடுத்த தாகவும் அவ்வக்காலங்களில் அந்த அந்த அன்பர்கள் யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற வண்ணமே தாம் தாமரிதிற் பெற்ற அப்பெரும் பேறுகளையெல்லாமியாவருமெழிதிலடையவேண்டுமென்னும் பெருங் கருணையினுலப் பெருமானைப் பார்த்துத் தெய்வமே, நீங்களிவ்விடங்களிற் கோயில் கொண்டிருந்து அடியார்கட்கருள் செய்தல் வேண்டுமெனப் பிரார்த்தித்துக்கொண்டார்களென்றும் வேண்டுவார் வேண்டியவற்றையெல்லாந் தப்பாதே கொடுத்தருளுமிறைவனுமவ்வாறே யவ்வவ்விடங்களில் விற்றிருந்தருள் புரிகின்றனர் எனவுமறியப்படுகின்றன. இவை வேதங்களினுலும், சிவாகமங்களினுலும் புராணங்களினுலும், தலம் தீர்த்தம் மூர்த்திகளின் பெயர்களினுலும் அவ்வவ்விடங்களிற் பாரம் பரியமாக வழங்கிவரும் கதைகளினுலுமறியக் கிடக்கின்றன. உமாபிராட்டியாரும், விநாயகரும், முருகக் கடவுளும் ஒவ்வோர் காலத்திற் றிருவானைக்கா, திருக்கேதாரம், காஞ்சி, மாயூரம், திருச்செஞ்ஞலூர் முதலிய ஸ்தலங்களிலாலயங்களுண்டாக்கிப் பூசை செய்துள்ளனர்.

கரிமுகத் தவுணர்க் காய்ந்து கரிமுகத்தண்ணல் பூசை
புரிசிவ நகரமீது தாரகற்பொருது செவ்வேள்
அரனே யர்ச்சித்த தார்க்கிழ் மணற்குறியான் பாலாட்டி
பரன்முடி மாலேசூடும் சேய்வளம் பதியிதாகும்.

இச்செய்யுள் விநாயகக் கடவுள் கயமுகசங்காரத்தின் பின்னரே திருச்செங்காட்டங்குடியில் கணபதீஸ்வரத்தை ஆக்கிப் பூசை செய்ததைக் குறிப்பிடுதல் காண்க.

இஃதேயல்லாது சிவபிராஞனவர் திருத்தணிகையில் முருகக் கடவுளேக் குறித்தோர் கணப்பொழுது தவஞ் செய்தனர். இப்படியாயினித்திருத்தலத்தின் பெருமையை யார் தான் எடுத்துரைக்கவல்லவர்.

பணிகிளர ராப்பண்ணவன் முருகற்படர்ந்தருந்
தவத்திஃனயாங்கு
கணிகமே புரிந்து கருத்து முற்றுதலாற் கணிகவெற்
பெனப்பெயர் விளங்கும்

என்பது தணிகைப் புராணச் செய்யுள். முருகப்பெருமாஞர் சூரபன்மஞடனும் வேடர்களுடனும் போர் செய்து முடித்தபின்னர் இவ்விடத்திலே வந்து தணிந்து இருப்பதஞலே இந்த இடம் தணிகை என்னும் பெயர்·பெற்றது என்றும் இவ்விடத்தில் எவர்களாயினும் ஒரு சிறிய தருமஞ் செய்தாலும் அது பெரிய தருமமாகி விரிந்து பெரும் பலஃனக் கொடுக்கும் என்றும் இங்கேயுள்ள குளத்திலே உள்ள நீலோற்பலச் செடியில் நாடோறும் மூன்று புஷ்பங்கள் விரியும் என்றும் வள்ளிநாயகியாருக்குக் கூறியதாகக் கந்தபுராணத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது.

விஷ்ணு மூர்த்தியானவர் சுதர்சனம் என்னும் சக்கராயுதத்தைச் சிவபெருமானிடம் பெறுதற்காகக் காஞ்சீபுரம் போய் ஒவ்வொருநாளும் ஆயிரந் தாமரைப் பூக்களிஞலர்ச்சனே செய்தனர். ஒருநாளொரு பூக்குறைந்தமையாற் தமது கண்ணேப் பிடுங்கியதஞலர்ச்சனே செய்தனர். உடனே சிவ

பிரானுனவர் அவருக்குக் காட்சி கொடுத்துச் சக்கராயுதத் தையுங் கொடுத்துக் கமலக்கண்ணன் என்னும் பெயரையுஞ் சூட்டினுர். அந்த ஸ்தலமின்றும் திருமாற் பேறு என வழங் கப்படுவதே இதற்கோர் சான்ருகும்.

ஆங்கவனே எதிர்நோக்கி நின்பூசைக்கக மகிழ்ந்தோ
முனக்கிஞ் ஞான்று
தேங்கமல விழியளித்தோம் பதுமாக்கனெனும்
பெயரிற் றிகழ்வா யிவ்வூர்
பாங்குபெறு திருமாற் பேறெனப் பொலிகவென் றருளிப்
பானுகோடி
தாங்கு கதிர்ச் சுதரிசனப் பெயராழித் தனிப்படையு
முதவினுனல்

என்னுங் காஞ்சிபுராணச் செய்யுளும்,

செக்கர்வான் சடையோன் சேவடிக்கிழன் ஞளில்
மெய்க்கண்ணிட்டுச் சக்கர நிபெற்ற விளையாட்டேபோல்
மைக்கோண் மேனியனே வானரக்கர் குலத்தரிய
செக்காங் குடியானே தேவ தேவனே

என்னும் விஷ்ணு பக்தர்களுள் மெஞ்ஞானியாகிய நம் மாழ்வாரருளிய திருவாய்மொழிச் செய்யுளுமிதனுண்மை யைத் தெரிவிக்கின்றன. இஃதேயல்லாது விஷ்ணு மூர்த்தியி னவதாரமாகிய ஸ்ரீ இராமரால் மணலினுலே ஆக்கிப் பூசை செய்யப்பட்ட ஆலயம் இராமேஸ்வரம் எனக் கா ர ண ப் பெயர் பெற்றும், யமதர்மனுற் பூசை செய்யப்பட்ட வாலயம் தர்மபுரமெனக் காரணப் பெயர் பெற்றும், இன்றும் வழங்கி வருவதும் அவ்வத்தலங்களின் பெருமையைக் காட்டுஞ் சான் றுகளாகும். நவக்கிரகங்களிலொன்ருகிய சனி பகவானுற் பீடிக்கப்பட்டு வருந்திய நளமகாராஜன் நாரத முனிவரினு பதேசத்தால் ஸ்தலயாத்திரை செய்து திருநள்ளாறு என்னு மாலயத்தையடைந்தான். உடனே சனி பகவானவனே விட்ட கன்று ஆங்கெழுந்தருளியிருக்குஞ் சிவபிரானே வ ண ங் கி க் கொண்டு அவ்விடத்திலேயே எழுந்தருளியிருக்கின்ரனர். இவ்

வாலயத்திலே நவக்கிரகங்களில்லை சனீஸ்வரனின் ஆலயம் மாத்திரமே இருக்கின்றது. நளனுக்கு நன்நெறி காட்டியமை யால் திருநள்ளாறெனுங் காரணப் பெயர் பெற்றது.

விளங் கிழைமடந்தை மலைமங்கை யொருபாகத்
துளங் கொளவிருத்திய வொருத்தனிடமென்பர்
வளங் கெழுவு தீபமொடு தூபமலர் தூவி
நளன் கெழுமி நாழும்வழி பாடுசெய் நள்ளாறே,

என்பது திருஞானசம்பந்த மூர்த்தி நாயனுரவர்கள் பாடியருளிய தேவாரம். இதில் நளன் வழிபாடு செய்தல் குறிப்பிட்டிருப்பது காண்க. இஃதேயல்லாது வைத்தீஸ்வரன் கோயிலுக்கு மேற்கே ஒன்றரைமைல் தூரத்திலேயுள்ள திருப் புன்கூர் என்னும் ஸ்தலம் திருநாளைப் போவாரின் தரிசனத் தின் பொருட்டாக நந்திதேவர் சிவசந்நிதியில் நின்றும் சற்றே விலகிய இடமாகும். திருக்காளத்தியோவெனின் கண்ணப்ப நாயனுராற்றமது கண்களைப் பிடுங்கியப்பிய பத்திச் செயலுக் கிலக்காயது. மார்க்கண்டேய முனிவர் மரணத்தினின்றும் தப்புவதற்காகப் பூசை செய்த சிவலிங்கமும் அக்காலத்திலிய மனை உதைத்ததற்காக அச்சிவலிங்கத்தினின்றுமெழுந்த சந் திரசேகரராகிய அமிர்தகடேஸ்வரரும் அபிராமியம்மாளு மெழுந்தருளியிருக்கும் பெருமையையுடையது திருக்கடவூரா கும்.

இஃதேயல்லாது,

அத்தனுலயம் அனைத்தும் வைதலும்
பத்தியோடுமுன் பரவியே மிகும்
சுத்தனுகிய தொலைவிலா ருயிர்
முத்தியெய்தினுன் முழுதுணர்ந்துளோன்

எனக் கந்தபுராணத்திற் கூறியபடி மார்க்கண்டேய முனிவர் ஆலய வழிபாட்டாலேயே முத்தியெய்தினர். சிவாலயங்க ளைச் சுற்றிவந்து நமஸ்கரிப்போர் தாமெடுத்து வைக்குமோவ் வோரடிக்கு மோவ்வோ ரஸ்வமேதயாகஞ் செய்த பலனடை வர். பான்டிய தேச அரசனுகவிருந்த வரகுணதேவர் பிரம

ஹத்தியால் வருந்திப் பலவகையான தானங்கள் தருமங்கள் செய்தனர். அநேக நாட்கள் சென்றும் அந்நோய் நீங்கவில்லே. கடைசியாகத் திருவிடைமருதூரை அடைந்து ஆலயத்தை வலம் வந்தான். அதனுலந்நோய் நீங்கியது. அந்த ஆலயத்தைச் செய்விதே கட்டுவித்தான்¢ பூசை உற்சவங்கள் செய்வித்தான். வேறும் பற்பல ஸ்தலங்கட்கும் சென்று வணங்கினுன், இந்த வரகுண ராஜனேப் பற்றிப் பதினெராந் திருமுறையில் திருவெண்காட நாயனுர்,

மருதவட்டத் தொருதனிக் கிடந்த
தலேயைக் கண்டு தலேயுற வணங்கி
உம்மைப் போல என்னித்தலேயும்
கிடத்தல் வேண்டுமென் றடுத்தடுத் திரந்தும்
கோயின் முற்றத்து மீமிசைக் கிடப்ப
வாய்த்தன வென்று நாய்க்கட்டமெ டுத்தும்
காம்புகுர்த்துதிர்ந்த கனியுருக்கண்டு
வேம்பு கட்கெல்லாம் விதான மமைத்து
பெரிய அன்பின் வரகுண தேவரும்

எனச் சிறப்பித்திருக்கின்றனர். இதன் பொருள்: திருவிடைமருதூராலயத்தின் முன்னரே கிடந்த ஒகு மானுடத் தலே மண்டை ஒட்டைக் கண்டெடுத்து அதைவணங்கி உம்மைப் போலவே எனது தலேயுங் கிடத்தல் வேண்டுமென்று பல முறை இரந்துகேட்டனர். ஆலய வீதியிலோர் பக்கத்திலே கிடந்த நாயின் மலத்தைக் கண்டு தனதருமைக் கையாலெடுத்து வெளிவே வீசினர். அவ்வாலயத்தின் பக்கத்திலே இலே உதிர்ந்திருந்த வேப்ப மரங்களுக்கு வெய்யிற் படாதபடி மேற்கட்டி செய்வித்தார். இவ்விதமான பெரிய அன்புள்ள வரகுணதேவர் என்பதாகும்.

இஃதேயல்லாது சோழ தேச இராஜ குமாரனுகிய எல்லாளனென்பவனுக்கு ஈழதேச அரசாட்சியைப் பறிகொடுத்த சிங்கள அரசனுகிய கைமுனு என்பவன் கதிர்வேற் பெருமானுரதுறையுளாகுந் திருக்கதிர்காமஞ் சென்று வணங்கி மீண்டு

வந்து எல்லாளனுடன் போர் செய்து வென்று நாட்டைக் கைப்பற்றினன். ஆங்கோராலயத்தைக் கட்டுவித்தான். பெருந்தொகையான பூஸ்திதிகளை ஆலயத்திற்காகக் கொடுத்தான்.

இவைகளேயல்லாமற் சிவாலய சந்நிதானங்களில் இயமன் அணுகான் என்றும், அவற்றுள்ளும் காசி, திருக்காளத்தி என்பவைகளில் சிவசந்நிதியினின்று மைந்து குரோசத்திற்கப்பாலும், மதுரையிற் சந்நிதியினின்றும் ஒரு குரோசத்திற்கப்பாலும், சிதம்பரத்தில் இரண்டு காத தூரத்திற்கப்பாலுமியமனைச் சஞ்சரிக்கும்படி சிவபெருமான் கட்டளையிட்டுள்ளனரென உண்மை நூல்கள் உரைக்கின்றன.

இதுகாறும் சிற்சில ஸ்தலங்களின் பெருமைகளையும் வரலாறுகளையும் எடுத்துக் காட்டினேம். மேலும் மேலுமிவைகளைப்பற்றி வரையப் புகின் மிக விரியுமாதலினித்துணையில் விடுத்தேன். முன்னரே பிரளயாகலர், விஞ்ஞானகலர் சகலர்கட்குச் சிவபிரானருள் செய்யும் முறைமையைப்பற்றியும், தீக்ஷையைப் பற்றியும் சிறிதே காட்டியுள்ளேன். ஈண்டுக் குருவையடையும் முறைமை யாதோவெனின், இக்குரவர்களாவார், வித்தியா குரு, தீக்ஷா குரு, ஞான குருவென மூவகைப்படுவர். அவற்றுள்ளும் மேலும் பற்பல வகைப்படுவர்.

அரச னுபாத்தியாயன் தாய்தந்தை தம்முள்
நிகரில் குரவரிவர்

என்பதனுலறிக. வித்தியா குரவராவார். அக்ஷரப் பயிற்சியிலாரம்பித்து, அக்கரவிலக்கணம், லிகிதம், கணிதம், புராணம், வியாகரணம், நீதிசாத்திரம், சோதிடசாத்திரம், தருமசாத்திரம், மந்திர சாத்திரம், சகுன சாத்திரம், சிற்ப சாத்திரம், வைத்திய சாத்திரம், உருவ சாத்திரம், இதிகாசம், காவியம், அலங்காரம், மதுரபாடனம், நாடகம், நிருத்தம், சத்தப்பிரமம், வீணை, வேணு, மிருதங்கம், தாளம், அஸ்திர பரீக்ஷை, கனக பரீக்ஷை, ரத பரீக்ஷை, கஜ பரீக்ஷை, அசுவ

பரிசைஷ, இரத்தின பரிசைஷ. பூமி பரிசைஷ, சங்கிராமவிலக்கணம், மல் யுத்தம், ஆகருடணம், உச்சாடணம், வித்துவேடணம், மதன சாத்திரம், மோகனம், வசீகரணம், இரசவாதம், காந்தருவ வாதம், பைபிலவாதம், சவத்திரவாதம், தாது வாதம், காருடம், நட்டம், முட்டி, ஆகாயப் பிரவேசம், ஆகாயகமனம், பரகாயப் பிரவேசம், அதிரிசயம், இந்திர சாலம், மகேந்திரசாலம், அக்கினித்தம்பம், ஜலத்தம்பம், வாயுத்தம்பம், திட்டித் தம்பம், வாக்குத் தம்பம், சுக்கிலத் தம்பம், கன்னத் தம்பம், கட்கத் தம்பம், அவத்தைப் பிரயோகமென்னு மறுபத்துநான்கு கலைகளுளொன்றையாவது, பலவற்றையாவது அறிவு விருத்தியின் பொருட்டுக் கற்பிப்பவராகும். இந்த ஆசிரியரினிலக்ஷணத்தைப் பற்றிப்பவணந்தி முனிவரியற்றிய தமிழிலக்கண நூலாகிய நன்னூலில்,

குலனருள் தெய்வங் கொள்கைமேன்மை
கலைபயில் தெளிவு கட்டுரைவன்மை
நிலம்மலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்
உலகியல றிவோடுயர் குணமினையவும்
அமைபவனூருரை ஆசிரியன்னே

எனக் குறிப்பிட்டிருக்கின்றனவே.

இதில் முதன்முதற் பிரதானமாக உயர்குலப் பிறப்பையும், கடவுள் வழிபாட்டையும் உபாத்தியாயருடையவராக இருத்தல் வேண்டுமென விதந்தோதியுள்ளனர். எங்கள் ஈழ மண்டலத்தில் ஆங்கிலேயரரசாட்சி முடிவுறும்வரையில் ஆசிரியராக இருந்தவர்கள் யாவரும் இவ்விரண்டுமுற்றவர்களாகவே இருந்தனர். அவர்களிடங் கல்வி கற்றவர்களுஞ் சற்குண தீபங்களாக விளங்கினர். தற்காலமோவெனின் நம்மவர்களிற் சிலரிடத்தில் தமிழ் இராச்சிய விருப்பும். பேரும், புகழும் பெறுமார்வமும் முற்றியதன் வாயிலானே சாதிக் கட்டுப்பாடுகள் நீக்கப்பட்டன. திராவிட முன்னேற்றக் கழகத்தினராலும், கம்மியூனிஸ்ட் கட்சியினராலும் சமய வழிபாடுகள் அறவே அகற்றப்பட்டன.

எனவே உயர்குலப் பிறப்பும், தெய்வ வழிபாடுமற்ற தற்கால ஆசிரியர்கள் சிலரிடத்திற் கலைபயிலும் மாணவர்களின் நிலையும், வாழ்க்கையு மெவ்வா றிருக்குமென்பதைப் பற்றிக் கூறவேண்டியதென்னே. தமிழ்ப் பாஷாபிவிருத்தியையும், சைவ சமயாபிவிருத்தியையும் மனதிற்கொண்ட பெரியோர்கள் இதுவரையிதிற் கவனஞ் செலுத்தாததென்னையோ.

தீக்ஷா குருவானவர் பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர ரென்னும் நான்கு வருணத்துட்பட்டவராய், வேதாகம ஞான நூற் பொருட்களை யியன்றளவறிந்தவர்களாய், மனக் குற்றமில்லாதவர்களாய்ச் சிவபுராணங்களைக் கற்றறிந்தவர் களாய்த் தேவார திருவாசகமாதியவற்றைப் பண்ணோடு மோதியவர்களாய்ச் சமய தீக்ஷை, விசேஷ தீக்ஷை, நிர்வாண தீக்ஷை' ஆசாரியாபிஷேக மென்பவை பெற்றுக் கொண்டவர் களேயாவர். இவர்கள் தத்தம் வருணத்தார்க்கும், தத்தமக் குக் கீழ் வருணத்தார்க்கும் ஆசாரியராகவிருந்து தீக்ஷை முதலியன செய்தற்குரித்துடையர் சூத்திரர் தம் வருணத்தாருடன் சங்கர சாதியார்க்குமாசாரியராவர். நான்கு வருணத் துக்குட்படாதவர்கள் கணவனிருக்கக் கள்ளக் கணவனுக்குப் பிறந்தவர்களாகிய குண்டகர், கணவனிறந்த பின் விதவை யிடத்துப் பிறந்தவர்களாகிய கோளகர், பதினாறு வயதுக் குட்பட்டவர் கொலை களவு முதலிய தீயொழுக்கமுடையவர் களாதியோர் ஆசாரியராகவிருந்து தீக்ஷையாதியன செய்தற் குருத்துடையரல்லர். இவற்றின் விரிவைச் சைவாகமங்களிலும், குருத்துவ பரீக்ஷை என்னும் நூலிலும். இவைகளினின்று மெடுத்து ஆறுமுக நாவலரவர்களினால் வெளியிடப் பட்ட இரண்டாஞ் சைவ வினா விடையில், சைவ பேதவியலினுள்ளுங் கண்டுகொள்க. இனி ஞான காண்டத்திலோவெனின் நான்கு வருணத்துள்ளும் உயர்ந்த வருணத்தார்க்குத் தாழ்ந்த வருணத்தாரும் ஆசாரியராகலாம், இதனைச் சுப்பிர பேதம், காமிகம், ஆஜிதம், காலோத்தரம் முதலான ஆகம வசனங்களை ஆதாரமாகக் கொண்டு தருமபுர ஆதீனத்து, ஏழாவது குருமூர்த்தியாகிய திருவம்பல தேசிக பரமாசாரிய

ரவர்களால் வடமொழியிலியற்றிய வருணாச்சிரம சந்திரிகை யில் கண்டு தெளிக.

இனிப் பிராமண வருணத்தவரரகிய குருமாரின் வரலா றென்னையோவெனின், ஆதியிலே சிறிகண்டரிடத்திலே தீக்ஷைபெற்று ஆகமோபதேசம் பெற்றவராகிய துருவாச முனிவர் பூலோகத்திலே கோதாவரி ஆற்றங்கரையிலேயுள்ள மந்தரகாளிபுரத்திலே சிவசந்நிதியிலே கடம்ப விருக்ஷ நீழலில் ஆமாத்தக மடத்தைத் தாபித்ததிலிருந்தனர். கௌசிபர், காசிபர், அகத்தியர், பாரத்துவாசர், கௌதமர் என்னும் சிவசிருஷ்டிப் பிராமணரைவரும் இந்தத் துருவாச முனிவ ராற் தீக்ஷை செய்யப்பட்டுத் தக்ஷிணாமூர்த்தி ரூப சிறீகண் டரை உபாசித்து' அவராலாக மோபதேசம் பெற்றுக்கொண் டனர். இவர்களின் சிஷர்கள் நால்வர். அவர்களுமவ்வாறே சிறிகண்டரை உபாசித்து ஆகமோபதேசம் பெற்றுக்கொண் டனர். இவர்களின் பொருட்டாக ஆமாத்த மடத்தினின்று மிரணபத்திரம், கோளகி, புஷ்பகிரி என்னும் மூன்று படங் கள் உண்டாயின. இந்த நான்கு மடங்களும் மந்திரகாளீசரு டைய சந்நிதியிலேயே உள்ளன. எழுபத்தொரு சதுர் யுகங் கள் கூடிய காலமே ஒரு மனுவந்தர காலமாகும். பதின் னான்கு மனுவந்தரங்கள் கூடிய காலமே ஒரு பிரம பகல். இரவு மப்படியே. இவ்வாறாக முன்னூற்றறுவது பிரம நாட்கள் ஒரு பிரம வருஷமாகிய கற்பமாகும். இப்பொழுதுள்ள பிரமா வுக்கு ஐம்பத்தொரு வயது நடக்கின்றது. இதற்குள் ஒருவர் பின் ஒருவராக ஆளுகின்ற சுவாயம்புவர் முதலிய பதின் னான்கு மனுக்களுள் ஆறு மனுக்களின் காலங்கழிந்தன. ஏழா மவராகிய வைவச்சுவத மனுவின் காலம் நிகழ்கின்றது. இந்த மனுவிற்குரிய எழுபத்தொரு சதுர் யுகங்களுள் இருபத்தெழு சதுர் யுகங்கள் முடிந்தன. இருபத்தெட்டாஞ் சதுர் யுகத்தில் மூன்று யுகங்கள் முடிந்தன. கலியுகம் நடக்கின்றது. ஆமாத் தக மடத்திற் கூறப்பட்ட கௌசிகர் முதலிய முனிவர்கள் முதலாம் மனுவாகிய சுவாயம்புவர் மனுவினெல்லை வரையு மிருந்தார்கள். அதன்பின்னரே பிராசாபத்திய முனி முதலி யோர் அந்த மடங்களிலிருந்தார்கள். தற்பொழுது நடக்

கின்ற கலியுகத்தின் ஆரம்பத்திலே இந்தச் சைவப் பிராமண பரம்பரையில் ஸ்ரீ வியாபகசம்பு குரு முதலியோர் சம்பிரதாய பதிகளாயிருந்தனர். அக்காலத்திலே இராஜேந்திர சோழ ராஜன் காசி சென்று திரும்பி வருகின்ற வழியிலே இச்சிவப் பிராமணர்களைத் தரிசித்து, உபாசித்து, அழைத்துவந்து தன் னுட்டிலும், பாண்டிய நாட்டிலுங் குடியிருத்தினுன். பிரம சிருட்டர்களாகிய மற்றைய பிராமணர்களுட் பலர் இச்சிவப் பிராமணர்களாகிய இருஷிகளிடத்திலே தீக்ஷைபெற்று, ஆகமோபதேசம் முதலியனவும் பெற்றனர்.

இங்ஙனமாகவே இவர்களின் பரம்பரையாகப் பிறந்து நல்லொழுக்கமுடைவர்களாய்க் குருத்துவ முறை பயின்றவர்களே தீக்ஷை, பரார்த்தலிங்க பூசை, மஹோற்சவ மாதியன செய்தற்குத் தகுதிவாய்ந்தவர்களாவர்.

ஞான குரவராவது: வேதாகம சைவ சித்தாந்த நூல்களைக் குரு வாயிலாகச் செவ்விதே ஓதி உணர்ந்தாவது திருவருளாலுணர்ந்தாவது அனுபவ வளவையில் வைத்துணர்ந்து மானுடராற் செய்தற்கரிய அரும்பெரும் செயல்களையெல்லா மாற்றுமாற்றல் பெற்றுத் தஞ் செயலெல்லாஞ் சிவன் செயலேயென்னுமெண்ணம் முற்றிக் கனிந்திருக்கும் ஞானபானுக்களேயாகும். ஈண்டுச் செயற்கரும் செயல்களென்றவை என்னையோவெனின், கொற்றவன்குடி உமாபதி சிவாசாரிய சுவாமிகள் தமது திருமடத்திற்கு நாடோறும் விறகு கொணர்ந்து கொடுத்துத் தீக்ஷை புரிந்தருள வேண்டுமென்று பிரார்த்தித்த சாம்பானுக்கு அது செய்ய மறுக்கவும், அவன் சிதம்பரேஸ்வரராலய வாசலையடைந்து தவங் கிடந்தனன். அன்றிரவு கூத்தப்பிரானருளாற் கிடைத்த

அடியார்க் கெளியன் சிற்றம்பலவன் கொற்றங்
குடியார்க்கெழுதிய கைச்சீட்டு—படியின்மிசை
பெற்றுன் சாம்பானுக்குப் பேதமறத் தீக்ஷைசெய்து
முத்தி கொடுக்கைமுறை

என்னுந் திரு நிருப வெண்பாச் செய்யுளைக் கொண்டு வந்து சிவாசாரிய சுவாமிகளின் முன்னிலையிலே வைத்து வணங்கி

ஞன். இதை உணர்ந்த சுவாமிகள் அவனைத் தன் முன்னரே அழைத்துத் திருநோக்குத் தீக்ஷை செய்தருளினர். உடனே அவனுடைய ஆன்மா பிரிந்து முத்திக்கேகியது. இதையறிந்து அவனைக் கொன்ருரென வெகுண்டு வந்த அரசன் முதலாயினோர்க்குப் பரிபக்குவம்வாய்ந்து மிகச் செழிப்புடனிருந்த முள்ளிச் செடிக்கு முத்திகொடுத்துக் காட்டியமையும், ஆலய துவஜாரோகண காலத்தில் மேலே யேருதிருந்த கொடிச் சீலையைக் கொடிக் கவிபாடியேறச் செய்தமையும் திருவெண்காடர் என்னும் பட்டினத்தடிகள் துளுவ நாட்டில் கழு மரத்தின் மேல் மிக மகிழ்ச்சியுடன் நின்று,

என்செயலாவதி யாதொன்றுமில்லை யினித்தெய்வமே,
புன்செயலே யென்றுணரப் பெற்றேனிந்த வூனெடுத்த
பின்செய்த தீவினையாதொன்று மில்லைப்பிறப்பதற்கு
முன்செய்த தீவினையோ விங்ஙனேவந்து மூண்டதுவே

என்ற செய்யுளைப் பாட அந்தக் கழு மரம் கொழுந்து விட்டெரிந்ததையும், வைகுண்டமென்னும் கைலாசபுரத்திலே சைவ வேளாளர் குலத்திலே வாழ்ந்த சண்முக சிகாமணிக் கவிராஜரின் புதல்வராக அவதரித்தவரும், செந்திலாண்டவன் திருவருள் பெற்றவருமாகிய காசிவாசி ஆதி குமரகுருபர சுவாமிகள் காசி அரசனுகிய டில்லி பாட்சாவின் முன்னிலையில் உயிர்ச் சிங்கத்தின் மேலிவர்ந்து சென்று காட்சி கொடுத்தமையும், சிவக்கக் காய்ச்சிய இரும்புத் துண்டைத் தமது திருக்கரத்திலேந்தியருளியமையும், திருக்களிற்றுப்படியாரென்னுஞ் சைவ சித்தாந்த நூலைச் செய்தருளிய திருக்கடவூர் உய்யவந்த தேவரவர்கள் தாமியற்றிய நூலைச் சிதம்பரம் சபாநாதர் சந்நிதியிலேயுள்ள கல்லினுற் செய்யப்பட்ட யானையின் முன்னரே வைக்க, அந்தக் கல்லானை உயிர் யானையே போன்று தனது தும்பிக்கையை நீட்டி, அந்தப் புத்தகத்தை எடுத்து நடேசப் பெருமானுர் பாதத்தில் வைத்தமையும், ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்த சுப்பிரமணிய பிள்ளையின் புதல்வராகிய குருஞான சம்பந்தரவர்கள் தமது குரவராகிய திருவாரூர் ஞானப்பிரகாச தேசிகரவர்களின் மடவாசலில் பெருமழை பெய்துகொண்டேயிருந்த இராக்காலம் முழுவ

தும் அந்த மழையினுலே சிறிதும் நனையாது கையிலேந்திய விளக்குடன் நின்றதும், சிவஞான போத நூலாக்கியோனு கிய மெய்கண்ட தேவரவர்கள் பொல்லாப் பிள்ளையாரிடம் வேதசிவாகமங்களையும், சிவஞான போதப் பொருளையும் படித்தமையும், சூர்ணிகை பெற்றமையும், நம்பியாண்டார் நம்பியவர்கள் திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையாரிடம் பாடங் கேட்டமையும், சோழ ராசனின் வேண்டுகோளின்படி தேவாரப் பிரதிகளிருந்த இடத்தை அந்த விநாயகப் பெருமானிடமே கேட்டறிந்தமையும், அருணகிரிநாத சுவாமிகளவர்கள்,

தனன தான தானன தனன தான தானன
தனன தான தானன.................. ..................தன தான
அதல சேட ஞைாட அகில மேரு மீதாட
அபின காளி தானுட அவளோடன்
றதிர வீசி வாதாடும் விடையி லேறு வாராட
அருகு பூத வேதாளம் அவை யாட
மதுர வாணி தானுட மலரில் வேத ஞராட
மயிலு மாடி நீயாடி வரவேணும்
கதைவி டாத தோள்பிம னெதிர்கொள் வாளி யால்நிடு
கருத லார்கள் மாசேனை பொடியாகக்
கதறு காலி போய்மீள விஜய னேறு தேர்மீது
கனக வேத கோடுதி அலைமோதும்
உததி மீதிலே சாரி‘ உலக மூடு சீபாத
உவண மூர்த்தி மாமாயன் மருகோனே,
உதய தாம மார்பான ப்ரபுடதேவ மா ராஜன்
உளமு மாட வாழ்தேவர் பெருமாளே

என்னுந் திருப்புழைப் பாடி, சுப்பிரமணியப் பெருமானுரைப் பிரபுடதேவ ராஜன் சபையில் நேரே காட்சி கொடுக்கச் செய்தமையும் இவை போல்வன பிறவுமாகும்.

இவ்வாமுகிய மெஞ்ஞான குருவை யாம் தேடிச் சேர்வ தெங்ஙனேவெனின் எல்லாமறிபவரும், எல்லாம் வல்லவருமாகிய சிவபெருமானுனவர் ஆன்மாக்கள் மீது கொண்ட

கைம்மாறற்ற பெருங்கருணையினாலே முன்மாதிரியாகத்தாமே ஆதி குரவராகக் கல்லால விருக்ஷ நீழலில் தக்ஷிணா மூர்த்தியாக எழுந்தருளியிருந்து சனகர், சனந்தரர், சனாதரர் சனர்க்குமாரரென்னும் முனிவர்கட்குபதேசித்தனர்.

கல்லாவின்புடையமர்ந்து நான்மறை யாறங்கமுதற்
கற்றகேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய்
மறைக்கப்பாலா
பெல்லாமா யல்லதுமா யிருந்ததனை யிருந்தபடி
யிருந்துகாட்டிச்
சொல்லாமற் சொன்னவரை, நினையாமல் நினைந்து
பவத்தொடக்கைவெல்லாம்

என்பது பரஞ்சோதி முனிவர் மொழிபெயர்த்தியற்றிய திருவிளையாடற் புராணச் செய்யுள். நான்கு மறைகளாவன: இருக்கு, யசுர், சாமம், அதர்வணமென்பனவாகும். ஆறங்கங்களாவன: வேத மந்திரங்களை உதாத்தம், அனுதாத்தம், ஸ்வரிதம் முதலிய சுர வேறுபாட்டினுலுச்சரிக்கும் முறைமையை யறிவிக்கும் சிக்ஷையும், வேதங்களில் விதிக்கப்பட்ட கருமங்களை அனுட்டிக்கும் முறைமையை அறிவிக்கும் கற்பமும், எழுத்துச் சொற்பொருளிலக்கணங்களை யறிவிப்பதாகிய வியாகரணமும், நிருத்தமும் வேத மந்திரங்களிற் காயத்திரி முதலிய சந்தங்களின் பெயரையும் அவ்வவைகளுக்குரிய எழுத்துக்களெவ்வளவென்பதனையு மறிவிக்கும் சந்தோவிசிதியும், கால விசேஷங்களை யறிவிப்பதாகிய சோதிடமுமாகும்.

இச்சிவபிரானாரே, சுப்பிரமணியக் கடவுள், பிரமா, விஷ்ணு, இந்திரன், அகத்தியர், நந்திதேவர் முதலியோர் பலருக்கும் குருவாகவிருந்தருள் செய்தனர்.

திருமாலிந்திரன் பிரம னுபமனியன் தபன் நந்தி
செவ்வேளாதி
தருமமுது குரவருக்குந் தனதருளா லாசிரியத்
தலைமைநல்கி

வருமெவர்க்கு முதற்குருவாய் மெஞ்ஞான முத்திரைக்
கைம்மலரும்வாய்ந்த்
வுருவழகும் குறுநகையும் காட்டியருள் தருஞ்சிவனே.
யுளத்தில்வைப்பாம்

என்பது சிகரணிமாலை முதற் சுலோகத் தமிழ்மொழிபெயர்ப்புச் செய்யுள். சிவபெருமானலே உபதேசஞ் செய்யப்பெற்ற நந்திதேவர், சனகர் முதலிய நால்வர்கட்கும், சிவயோகமா முனிவருக்கும், பதஞ்சலி முனிவருக்கும், வியாக்கிரபாத முனிவருக்கும், சதாசிவ முனிவரென்னும் மறுநாமமுடைய திருமூலநாயனருக்கு முபதேசித்தருளினர்.

நந்தியருள்பெற்ற நாதரை நாடிடி
னந்திக ளுல்வர் சிவயோகமாமுனி
மன்று தொழுத பதஞ்சமி வியாக்கிர
ரென்றிவ ரென்னே டெண்மருமாமே,

என்னும் திருமூலநாயராரருளிய திருமந்திரச் செய்யுளிதனே வலியுறுத்தும்.

இவர்களொவ்வொருவருந் தம்மை வந்தடைந்த பரிபக்குவம் வாய்ந்த ஆன்மாக்களுக்குத் தீக்ஷை செய்து ஞானப் பொருளேயுபதேசிக்க, அவர்களுமவ்வாறே செய்து சிஷ்யர்களுக்கு நன்நெறி காட்டினர்கள். இவ்வாற்ருனே சிஷ்ய முறையானே வருதலினலிவர்கள் சந்தான குரவர்களெனப் போற்றப்பட்டனர்.

இவ்விதமான ஞான குரவர்களே நாம் ஸ்தல தீர்த்த யாத்திரைகளிலேயே அடைதல் வேண்டும்.

மூர்த்திதலம் தீர்த்தம் முறையாற் ருெடங்கினர்க்கோர்
வார்த்தைசொலசற் குருவும் வாய்க்கும் பராபரமே.

என்ருர் தாயுமானவர். இதனே மாணிக்கவாசக சுவாமிகள் அரிமர்த்தன பாண்டிய ராஜனுக்காகக் குதிரை வாங்கும்படி

சென்ற சமயத்தில் திருப்பெருந் துறையில் ஞானசாரியரை யடைந்து நிஷ்டை பெற்றமையானும், குமர குருபர சுவாமிகள் செந்திற் கந்தப் பெருமானுரைப் பிரார்த்திக்க அவரருளால் நீ உத்தர தேச யாத்திரை செய்யுங் காலத்து யாண்டு உன் வாக்குத் தடைப்படுகின்றதோ அவ்விடத்தே ஞானேபதேசம் பெறுக என்று அசரீரி வாக்கெழுதலும், அவர் அவ்வாறே யாத்திரை செய்யுங் காலத்தில் தருமபுர ஆதீனத்து நான்காவது குரு மூர்த்தியாகிய மாசிலாமணி தேசிக பரமாசாரியரவர்கள் முன்னிலையில்,

ஐந்துபேரறிவுங் கண்களேகொள்ள வளப்பருங் கரணங்களுன்கும்
சிந்தைபேபாகக் குணமொரு மூன்றுந் திருந்துசாத்துவிக மேயாக
விந்துவாழ்சடையா னுடுமானந்த வெல்லையில் தனிப்பெருங் கூத்தில்
வந்தபேரின்ப வெள்ளத்துட்டிளைத்து மாறிலாமகிழ்ச்சியின் மலர்ந்தார்

என்னும் பெரிய புராணச் செய்யுளினனுபவப் பொருள் தெரியாது மயங்கி, அக்குருமூர்த்தியையே தனக்கு ஞானகுருவாகக் கொண்டருளியமையாலும், இந்தத் தருமபுர ஆதீனமே முன்னே கூறிய நந்தி மரபு மெய்கண்டதேவர் சந்தானமாகும். தாயுமானவ சுவாமிகள் திரிசிரபுரத்திற் தாயுமானவராலய தரிசனத்திற்காகச் சென்ற சமயத்திலேயே மௌன குருவைச் சந்தித்துபதேசம் பெற்றமையானும், இங்ஙனமாகவே வேறுமனேகர் யாத்திரைசெய்யுங் காலத்திலேயே குருதரிசனம் பெற்றுர்களென அறியக் கிடத்தலானுமென்க.

இந்தத் திருநடனங்களுடன் சேர்ந்ததாகிய ரதோற்சவத்தினுண்மைக் கருத்தினையும் சிவாகம ஞானபாதங்களிற் கூறப்பட்டிருப்பதற்கிசையச் சுருக்கிக் காட்டுகின்றனன்.

முற்காலத்திலே சிவபிரானுனவர் மந்தர கேசரி மலைகளை அச்சாகவும் சூரிய சந்திரர்களைச் சில்லுகளாகவும் பதினன்கு லோகங்களையும் பதினன்கு தட்டுக்களாகவும் ஆகாசத்தை

ஆசனமாகவும் உதயாஸ்தம மலைகளைக் கூவிரமாகவும் (கூவிரம் என்பது தேர்க் கொடிஞ்சி, நதிகள் நதங்களைக் கொடிகளாகவும் நக்ஷத்திரங்களை மேற்கட்டியாகவும் மோக்ஷ லோகத்தை மேல் விரிவாகவும் யாகங்களைச் சட்டங்களாகவும் அட்டமலைகளையும் தூண்களாகவும் அட்டயானைகளைத் தாங்குவனவாகவும், ஏழு சமுத்திரங்களையுந் திரைச்சீலைகளாகவும் வேதாங்க உபாங்கமனுசாஸ்த்திரங்களை மணிகளாகவும் நான்குவேதங்களைக் குதிரைகளாகவுங் கொண்டமைத்த தேரிலே யெழுந்தருளிக் கங்கை முதலிய தேவமாதர்கள் சாமரை யசைக்க ஊர்வசி முதலிய கணிகைப் பெண்கள் நடனமாட மகாமேருமலையை வில்லாகவும் சரஸ்வதியை வில்லிற் கட்டிய மணியாகவும் வாசுகியைக் கயிருகவும் விஷ்ணுவை அம்பாகவும் அக்கினிதேவனை அம்பின் கூர்வாயாகவுங் கொண்டு பிரமாவாகிய சாரதி பிரணவமாகிய சவுக்கைக் கொண்டு செலுத்த முப்புர அவுணர்களைத் தமது திருப்புனனகையக்கினியினுல் நீருக்கியருள் செய்தார் என்னும் வரலாற்றைக் காட்டுவதாக இந்த ரதோற்சவமுணரப்படுகின்றது. இதனை மிக நுண்ணிதேயாராயும் போது விஸ்வரூபமுடையவராயும் உலக காரணராயுமிருப்பவர் சிவபெருமானேயென்பதும் முப்புரம் என்பது ஆணவம் கன்மம் மாயையென்னும் மும்மல காரியங்கள் என்பதும் அந்த முப்புரங்களையும் நீருக்கித் தாரகாக்ஷன் கமலாக்ஷன் வித்யுன்மாலி என்னும் மூவர்களையுந் தேவர்களையுமடிமையாகக் கொண்டு அவர்கட்கெல்லாந் தம் பதமருளியின்பங் கொடுத்தமை மும்மல காரியங்களைக் கெடுத்து விஞ்ஞானகலர், பிரளாயகலர், சகலர் என்னும் மூவகையான்மாக்களையும் அடிமையாகக் கொண்டு திருவடி முத்தி கொடுக்குமுண்மையேயாகுமெனவுமறியப்படுகின்றது.

உபதேச காண்டத்து மந்தரத்தொடு கேசரி நெடுவரை வாங்கி என்பது முதலாகவுள்ள செய்யுள்களில் இதன் விரிவு காண்க.

அப்பணி செஞ்சடையாதி புராதனன்
முப்புரஞ் செற்றன ரென்பர்கள் மூடர்கள்
முப்புரமாவது மும்மலகாரியம்
அப்புர மெய்த்தமை யாரறிவாரே

எள்பது திருமூலர் திருமந்திரம்.

இஃதேயல்லாது இந்தத் தேரிலே விளங்கும் உச்சிக்குடை பிரம ரந்திரமாகவும், கலசம் சோடசாந்தத் தானமாகவும் மேலுள்ள முதலாமடுக்குத் துவா நசாந்தத்தானமாகவும், இரண்டாமடுக்குமஸ்தக ஆதித்தானமாகவும் மூன்ருமடுக்கு மஸ்தக மத்தியஸ்தானமாகவும் நான்காமடுக்கு மஸ்தகாந் தஸ்தானமாகவும் ஐந்தாமடுக்கு இலாடமத்தியமாகவும், ஆருமடுக்குப் புருவமத்தியமாகவும் ஏழாமடுக்கான முப்பத் திரண்டு குத்துக்கால்கள் முப்பத்திரண்டு தத்துவங்களாகவும் முற்றுறைகள் கண்களாகவும், பிற்றுறைகள் குடுமியாகவும், பக்கத்துறைகள் காதுகளாகவும் பீடமுதற்பகுதி வாயாகவும் இடப்பக்கத்துள்ள இருகுதிரை வடிவங்கள் இடப்பாகச் சூரிய சந்திர கலாவாசிகளாகவும் வடப்பக்கத்துள்ள இரு குதிரை வடிவங்கள் வலப்பாகச் சூரிய சந்திர கலாவாசிகளாகவும் சாரதி வடிவம் மும்மல ரூபமாகவும் எட்டாமடுக்கு அந்தக் கரண சொரூபம் கண்டத்தானமென்பனவாகவும் அதன் கிழிடம் ஐந்தவத்தை, ஐங்கோசம் இராகாதி பதின்முக்குணம் என்பவற்றின் வடிவமாகவும் இருதயத் தானமாகவும், அதன் கிழ்ப்பகுதி நாபித்தானமாகவும் அதன் கீழுள்ள அச்சு பஞ்சபூ தம் குண்டலினி சத்தித் தானமாகவும் சக்கரங்கள் இருகால் களாகவுங் கொண்டு, சரீர உருவத்தை விளக்குகின்றது. இந் தச் சக்கரங்களாகிய தசவாயுக்களேயும் நிறுத்த அசைத்தல் முதலிய வினைகள் ஒழியும், இவ்வாறு நிறுத்தப் பழகிய சீவன் மனதத்துவத்தை நாபி இருதயம் வாய் நாசி என்பவற்றிற்கு முறையே ஏற்றி அதிலிருந்து கண்வழியரக, மேல் நோக்கி உச்சிக்குடையாகிய பிரமரந்திரத்திற்கு ஏற்றி லயப்படுத்திச் சும்மாவிருந்தபடி யிருக்கின்ற நித்தியானந்தராக விருக்க வேண்டுமென்பதை இந்தத் தேர்வடிவம் அறிவிப்பதாகும். பெரும் ஞானிகள் யோகிகள் இதனுண்மையை அனுபவவாயி லாக உணர்கின்றனர் பிறர்க்கும் பக்குவம் நோக்கி உணர்த்து கின்றனர்.

இவ்வகைத்தானே பற்பல வகையானும் ஞானவுணர்ச்சி பெற்றவர்கள் பசுஞானத்தாலும் பாச ஞானத்தாலும் அறி தற்கரிய சிவபிரானை ஞானமாகிய கண்ணினுலே ஆராய்ந்து

ணர்வர் உணரவே அப்பதி ஞானம் பிறவித்துயராகிய வெப் பத்துக்குக் குழிர்ந்த நிழலாய் விளங்கும்.

நாம் இறைவனை ஞானக் கண்ணினாலே காணவேண்டு மென்பதென்னையோவெனின்,

ஞானக் கண்ணினற் சிந்தைநாடி
உராத்துணைத் தேர்த்தெனப் பாசமொருவ
தன்னிழலாம் பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே

என்பது சிவஞான போத ஒன்பதாஞ் சூத்திரம். உயிராற் காட்டப்பட்டுப் பிற பொருட்களைக் காண்கின்ற கண்ணானது தன்னைக் காணமாட்டாது. அஃதல்லாமலும் தனக்கு அந்த விஷயத்தைக் காண்பித்த முதல்வனாக நிற்கும் உயிரையும் காணமாட்டாது. இஃதே போன்று யாதொரு பொருளையுந் தேர்ந்து அறிகின்ற உயிரும் தன்னியல்பினை யறியமாட்டாது தன்னுடனேயே நிற்கின்ற முதல்வனையுமறியமாட்டாது. இவ் விதமான தேர்ச்சி அறிவினிடத்துமுடனாகக் கலந்து நிற்குங் கள்வன் அம்முதல்வனாதலினாலேயாகும். இக்காரணத்தினா லேயே முதல்வனை ஞானக்கண் கொண்டே காணல் வேண்டு மெனக் கூறப்பட்டது.

காட்டிய கண்ணே தனைக்காணா கண்ணுக்குக்
காட்டாய வுள்ளத்தைக் கண்காணா—காட்டிய
உள்ளத்தனைக் காணா உள்ளத்தின் கண்ணாய
கள்வன்றா னுள்ளத்திற் காண்,

இங்ஙனே பதிஞானம் பெற்ற ஆன்மாவானது சிவபிரானான வர் ஆன்மாவினுள்ளே ஆன்மாவாகக் கலந்து நிற்கின்ற முறைமைபோலச் சிவபெருமானாரிடத்திலே யேகோபவித்துத் தன்னுடைய செயலாவனவெல்லா மிறைவன் செயலாமெ னவே கண்டு நிற்பர். ஆகவே மும்மலங்களும் அவரை விட்ட கன்றுவிடும்.

அவனேதானே யாகிய வந்நெறி
ஏகனுகி இறைபணி நிற்க
மலமாயை தன்ருெடு வல்வினையின்றே.

— சிவஞானபோதம் பத்தாஞ் சூத்திரம்.

இனி நம் பரமபதியாகிய நடராஜப் பெருமாஞர் அன வரதானந்த நடனஞ் செய்கின்ற நித்திய பரமானந்த தத்துவ மசைவற்றுடுஞ் சத்திய ஞானனந்த ஸ்தலமாகிய சிதம்பரத் தின் பெருமையோ அளவிறந்தனவாகும். இஸ்லாமிய மார்க்க நூலாகிய திருக் குர்ஆனில் ''இஸ்லாம் மார்க்கத் துட்பட்ட வர்கள் ஒவ்வொருவரும் தத்தம் மரணத்திற்கு முன்பாகவே ஒரு முறையாவது மக்கத் திருநகர் சென்று தொழுது வருதல் வேண்டு''மென வற்புறுத்திச் சொல்லப்பட்டிருக்கின்றதே. இதேபோன்று நம் சைவ சமயத்தவர்களொவ்வொருவரும் தவருதே யொரு முறையாவது தில்லை சென்று வணங்கல் வேண்டும்.

இதன் பெருமையை நன்குணர்ந்தவராகிய யாழ்ப்பா ணத்துத் திருநெல்வேலி ஞானப்பிரகாசரவர்கள் முதன்முத லாகச் சிதம்பரஞ் சென்று மீண்டு வருவதற்கு மனமில்லாதவ ராய் ஆங்குத் தங்கி அடியார்களினுபயோகத்தின் பொருட் டாக ஓர் குளத்தையும் வெட்டி அதன் பாகத்திலோர் மடத் தையுங் கட்டுவித்து, அதிலிருந்துகொண்டு நாடோறுஞ் சுவாமி தரிசனஞ் செய்துகொண்டிருந்து ஆங்கேயே சிவபத மடைந்தனர். இதன் பின்னரே ஆறுமுக நாவலரவர்கள் ஆங் குச் சென்று தங்கி ஓர் வித்தியாசாலையைக் கட்டி நடாத்திக் கொண்டு நாடோறுஞ் சிவதரிசனஞ் செய்தனர். இதன் பின் னரே எங்கள் யாழ்ப்பாணத்தவர்கள் பலரும் அடிக்கடி சிதம் பர யாத்திரை செய்ய ஆரம்பித்துவிட்டார்கள். யாழ்ப்பா ணத்துக் கந்தர் மடத்தில் பிரபல வர்த்தக சிரோன்மணியும், தயை, ஈகை முதலாய சற்குணங்களுற்றவரும், சுருட்டுக் கைத்தொழிலை யாரம்பித்துப் பலர்க்குமுபகார புருஷராக விளங்கியவருமாகிய சிவகுருநாதபிள்ளை யவர்கள் அங்குச் சென்று தரிசனஞ் செய்து ஒவ்வொரு மாசமும் பிரதோஷ

வுற்சவத்தைத் தம்பெயராலேயே நடாத்தும்படி பெருமுதல் கட்டினர்.

தற்காலத்திலவரின் பௌத்திரர்களாகிய சகல சற்குண சம்பன்னசீலர் சச்சிதானந்தமவர்களும், பிரம்மானந்தரவர்களும் மேலும் மேலும் பொருளுதவிச் சிறப்புற இவ்விழாவை நடாத்தி மகிழ்கின்றனர். கொழும்பு, சேர் பொன்னம்பலம் அருணசலமவர்களின் புத்திரியும் தாம் தவஞ்செய்தல் வேண்டுமென்னும் பேரவாவுடையராயினும், ''துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல் மற்றையவர் தவம்'' என்னும் திருவள்ளுவர் கூற்றிற் றிலக்காய் ஞானிகளையும், சந்நியாசிகளையும், புலவர்களையும், குருமாரையும் வலிந்தழைத்துபசரணை செய்யும் பெருங்குணமுடையவரும், திருக்கேதீச்சுரவாலயத்தின் ஞாங்கரிற் சிவானந்தாச்சிரமத்தையாக்கிப் பிராமணக் குருமாரின் பிள்ளைகள் கல்வி கற்றற்காகிய வழிவகைகளைச் செய்தவரும், காசியினின்றுங் கங்கா தீர்த்தத்தை யெடுப்பித்து நம்மீழ நாட்டிலுள்ள வாலயங்களிலெல்லா மடிக்கடி அபிசேகஞ் செய்விக்கின்றவரும், கொழும்பு, கொச்சிக்கடைத் தம்பையா முதலியார் சத்திரத்திற்கதிபராக விருந்து நடத்துபவருமாகிய சிவாநந்தம்மாளவர்கள் அடிக்கடி சிதம்பரஞ் சென்று, பெருமானாரின் பாதத்தில் நவரத்தினங்களிழைக்கப்பட்ட பிரணவம் பொறித்த பதக்கத்தைச் சூட்டியுள்ளனர்.

கொழும்பு, சைவ மங்கையர் கழக ஸ்தாபகர்களிற் சிரேஷ்டரும், சைவ சமயப் பற்று மிக்குற்று ஆண்டுதோறுந் தீர்த்த தல யாத்திரை செய்பவரும், வைத்தியலிங்கச் சிறுப்பரவர்களின் புத்திரியும், குலவீரசிங்கம் நமசிவாயமவர்களின் பத்தினியுமாகிய பாலாம்பிகை அம்மாள் முத்தாலும் வைரத்தாலும் செய்யப்பட்ட ஓர் மாலையை நடராஜப் பெருமானுக்குச் சாத்துவித்து மகிழ்ந்தனர்.

## முடிபுரை

இந்நூலின் கண்ணே, பெறுதற்கரிய இம்மானுடப் பிறவியைப் பெற்றுக்கொண்டவர்களாகிய நாம், சமய தீக்ஷை,

விசேஷ தீக்ஷை, நிர்வாண தீக்ஷை என்பவைகளைப் பெற்றுக் கொள்ளவேண்டுமென்பதும், தத்தமக் குவந்த ஆச்சிரமத்தில் வழுவாதொழுக வேண்டுமென்பதும், சிவனுபாயத்தின் பொருட்டாக நீதியான வழியிற் பொருளீட்ட வேண்டுமென்பதும், சஞ்சித மல நீக்கத்தின் பொருட்டாகத் தருமங் கொடுத்தல் வேண்டுமென்பதும், அங்ஙனே தருமங் கொடாதவர்கள் பின்னர்த் தரித்திரர்களாவார்களென்பதும், ஸ்தல தீர்த்த யாத்திரை செய்தல் வேண்டுமென்பதும், அவ்வக் காலங்களில் இறைவன் குரு வடிவமுடையவராகவந்து அருள் செய்வாரென்பதும், அதனுல் இஷ்டசித்திகளையெல்லாம் பெற்றுச் செவ்விதே நோய், வறுமை முதலியன அணுகாதபடி வாழலாமென்பதும், ஈற்றிலிறைவனுடன் இரண்டறக் கலப்பதாகிய பேரின்ப முத்தியை யடையலாம் என்பதும் பற்பல பிரமாணங்கள் கொண்டு விளக்கிக் காட்டப்பட்டிருத்தல் காண்க.

திருச்சிற்றம்பலம்.



உ

# தேவாரம்

## திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளியவை

பண் - குறிஞ்சி

இராகம் - யதுகுலகாம்போதி] [தாளம் - திருபுடை.

திருச்சிற்றம்பலம்.

கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
முற்றா வெண்டிங்கண் முதல்வன் பாதமே
பற்றா நின்றாரைப் பற்றா பாவமே. 1

பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட் டெரியோம்புஞ்
சிறப்பர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
பிறப்பில் பெருமானைப் பின் தாள் சடையானை
மறப்பி லார்கண்டீர் மையல் தீர்வாரே. 2

மையா ரொண்கண்ணார் மாட நெடுவீதிக்
கையாற் பந்தோச்சுங் கழிசூழ் தில்லையுட்
பொய்யா மறைபாடல் புரிந்தா னுலகேத்தச்
செய்யா னுறைகோயில் சிற்றம் பலந்தானே. 3

நிறைவெண் கொடிமாட நெற்றி நேர்தீண்டப்
பிறைவந் திறைதாக்கும் பேரம் பலந்தில்லைச்
சிறைவண் டறையோவாச் சிற்றம் பலமேய
இறைவன் கழலேத்து மின்ப மின்பமே 4

செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச்
செல்வ மதிதோயச் செல்வ முயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
செல்வன் கழலேத்துஞ் செல்வம் செல்வமே. 5

வருமாந் தளிர்மேனி மாதோர் பாகமாந்
திருமாந் தில்லையுட் சிற்றம் பலமேய
கருமா னுரியாடைக் கறைசேர் கண்டத்தெம்
பெருமான் கழலல்லாற் பேணா துள்ளமே. 6

அலையார் புனல்சூடி யாகத் தொருபாக
மலையான் மகளோடு மகிழ்ந்தா னுலகேத்தச்
சிலையா லெயிலெய்தான் சிற்றம் பலந்தன்னைத்
தலையால் வணங்குவார் தலையா னார்களே. 7

கூர்வா ளரக்கன்றன் வலியைக் குறைவித்துச்
சீரா லேமல்கு சிற்றம் பலமேய
நீரார் சடையானை நித்த லேத்துவார்
தீரா நோயெல்லாந் தீர்தல் திண்ணமே. 8

கோணா கணையானுங் குளிர்தா மரையானுங்
காணார் கழலேத்தக் கனலா யோங்கினான்
சேணார் வாழ்தில்லைச் சிற்றம் பலமேத்த
மாணா நோயெல்லாம் வாளா மாயுமே. 9

பட்டைத் துவராடைப் படிமங் கொண்டாடும்
முட்டைக் கட்டுரை மொழிவ கேளாதே
சிட்டர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
நட்டப் பெருமானை நாளுந் தொழுவோமே. 10

ஞாலத் துயர்காழி ஞான சம்பந்தன்
சீலத் தார்கொள்கைச் சிற்றம் பலமேய
சூலப் படையானைச் சொன்ன தமிழ்மாலை
கோலத் தாற்பாட வல்லார் நல்லாரே. 11

திருச்சிற்றம்பலம்.

# திருநாவுக்கரசு நாயஞர்

## திருவாய் மலர்ந்தருளியவை

திருச்சிற்றம்பலம்.

பத்தஞய்ப் பாடமாட்டேன் பரமனே பரமயோகி
எத்திஞற் பத்திசெய்கே னென்ஃன நீ யிகழவேண்டா
முத்தனே முதல்வாதில்ஃல யம்பலத் தாடுகின்ற
அத்தாவுன் ஞடல்கா[illegible]ா னடியனேன் வந்தவாறே. 1

கருத்தஞய்ப் பாட[illegible]டேன் காம்பன தோளிபங்கா
ஒருத்தரா லறியவொண்ணுத் திருவுரு வுடையசோதி
திருத்தமாந் தில்ஃலதன்னுட்டிகழ்ந்த சிற்றம்பலத்தே
நிருத்தஞன் காணவேண்டி நேர்பட வந்தவாறே. 2

கேட்டிலேன் கிஃள பிரியேன் கேட்குமா கேட்டியாகில்
நாட்டினே னின்றன்பாத நடுப்பட நெஞ்சினுள்ளே
மாட்டினீர் வாஃளபாயு மல்குசிற் றம்பலத்தே
கூட்டமாங் குவிமுஃலயாள் கூடநீ யாடுமாறே. 3

சிந்தையைத் திகைப்பியாதே செறிவுடை யடிமைசெய்ய
எந்தைநீ யருளிச்செய்யா யாதுநான் செய்வதென்னே
செந்தியார் வேள்வியோவாத் தில்ஃலச்சிற் றம்பலத்தே
அந்தியும் பகலுமாட வடியிஃண யலசுங்கொல்லோ. 4

கண்டவா திரிந்துநாளுங் கருத்திஞ னின்றன்பாதங்
கொண்டிருந் தாடிப்பாடிக் கூடுவன் குறிப்பிஞலே
வண்டுபண் பாடுஞ்சோஃல மல்குசிற் றம்பலத்தே
எண்டிசை யோருமேத்த விறைவநீ யாடுமாறே. 5

பார்த்திருந் தடியனேஞன் பரவுவன் பாடியாடி
மூர்த்தியே யென்பனுன்ஃன மூவரின் முதல்வனென்பன்
ஏத்துவா ரிடர்கள் தீர்ப்பாய் தில்ஃலச்சிற் றம்பலத்துக்
கூத்தாவுன் கூத்துக்காண்பான் கூடநான் வந்தவாறே. 6

பொய்யினைத் தவிரவிட்டுப் புறமலா வடிமைசெய்ய
ஐயநீ யருளிச்செய்யா யாதியே யாதிமூர்த்தி
வையகந் தன்னின்மிக்க மல்குசிற் றம்பலத்தே
பையநுன் னுடல்காண்பான் பரமநான் வந்தவாறே 7

மனத்தினர் திகைத்துநாளு மாண்பல நெறிகண்மேலே
கனைப்பரா லென்செய்கேனோ கறையணி கண்டத்தானே
தினைத்தனை வேதங்குன்றாத் தில்லைச்சிற் றம்பலத்தே
அனைத்துநின் னிலயங்காண்பா னடியனேன் வந்தவாறே. 8

நெஞ்சினைத் தூய்மைசெய்து நினைக்குமா நினைப்பியாதே
வஞ்சமே செய்தியாலோ வானவர் தலைவனேநீ
மஞ்சடை சோலைத்தில்லை மல்குசிற் றம்பலத்தே
அஞ்சொலாள் காணநின்று அழகநீ யாடுமாறே. 9

மண்ணுண்ட மாலவனு மலர்மிசை மன்னினனும்
விண்ணுண்ட திருவுருவம் விரும்பினர் காணமாட்டார்
திண்ணுண்ட திருவேமிக்க தில்லைச்சிற் றம்பலத்தே
பண்ணுண்ட பாடலோடும் பரமநீ யாடுமாறே. 10

திருச்சிற்றம்பலம்